# இப்பொழுது இவர் ஒரு சாமான் ஏற்றிச் செல்லும் மோட்டார் வண்டியின் சொந்தக்காரர்

காரணம் யூகோ பாங்க் பண உதவி செய்தது

ஒரு காலத்தில் இவர் சம்பளத்திற்கு டிரைவராக இருந்தார். இப்பொழுது ஒரு சாமான் ஏற்றிச் செல்லும் மோட்டார் வண்டி சொந்தக்காரர்

யூகோ பாங்க் பண உதவித் திட்டங்களை நீங்களும் பயன் படுத்திக்கொள்ளுங்கள்.

*விவரங்களுக்கு அருகிலுள்ள பாங்க் கிளையுடன் தொடர்பு கொள்க.*

**யூகோ பாங்க்**
**வளம் பெற வழி**
**வகுத்தளிக்கின்றது**




தலைமை ஆபீஸ் : கல்கத்தா



UCO-17/76

# கல்கி பொருளடக்கம்



சாதாரண, ஆடி 17 :: 1970, ஆகஸ்டு 2





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-20 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-[illegible] |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |



Chi: K. BALASUBRAMANIAN B. COM. A. C. A., Assistant, Fraser & Ros, Madras (son of Sri S. Krishnaswamy Director, Madras Advertising Co. Private Ltd.) with Sow: HEMA B.A.(HONS), Daughter of Sri P.R. Mahadevan M. Sc., Finance Executive, Karamchand Thapar Group, New Delhi.



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 30 □ இதழ் 1



# பாரதக் கூட்டணி

ஜனநாயகத்தில் பற்றுக் கொண்டவர்கள் யாவரும் ஊக்கமும் உற்சாகமும் கொள்ளும் விதத்தில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த சம்பவங்கள் உருவாகி வருகின்றன. நமது தாய்நாட்டின் பண்புகள் அனைத்தையும் சிதைத்து, அதைக் கம்யூனிஸ பூதத்துக்குப் பலியிடும் கொடுமைக்கு எதிராக, தேசத்துக்கு உயிரளிக்கின்ற கூட்டணித் திருப்பணி தொடங்கி விட்டது!

ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ள தேச பக்தக் கட்சிகளெல்லாம் தமது வேற்றுமைகளை மறந்து, சுமூகமாக ஒத்துழைத்து, இந்தியாவைக் காப்பாற்ற முன்வர வேண்டும் என்று பழைய காங்கிரஸ் அண்மையில் ஓர் அழைப்பு விடுத்தது. இதையடுத்து ஜனசங்கம் சண்டிகரில் கூடிப் பழைய காங்கிரஸின் கோரிக்கைக்கு ஆதரவு கொடுத்தது. சுதந்திரக் கட்சியின் மகா சபை சென்ற வாரம் சென்னையில் கூடிப் பழைய காங்கிரஸின் கோரிக்கைக்கு முழு ஆதரவு தெரிவித்தது. முதற் படியாக இந்த மூன்று கட்சிகளும் பார்லிமென்டில் ஒரு கூட்டணியாகச் செயலாற்ற முற்படலாம் என்ற நம்பிக்கை பொதுவாக இருந்து வருகிறது. ஆந்திரா, தமிழ் நாடு, மைசூர், கேரளம் ஆகிய தென் மாநிலங்களின் பழைய பிரதேச காங்கிரஸ் காரியக் கமிட்டிகள் கூடி, கூட்டணி முயற்சிக்கு முழு ஆதரவு தெரிவித்தன. தேசத்தையும், ஜனநாயக வாழ்வையும் காப்பாற்றுவதற்காக ஒரு பெரிய இயக்கத்தையே தேசமெங்கும் நடத்த வேண்டும் என்ற அபிப்பிராயம் திருப்பதியில் நடந்த இக்கூட்டத்தில் உருவாயிற்று.

தேசத்தைக் காக்க ஜனநாயகக் கட்சிகளின் கூட்டணி தேவை என்று காமராஜ் கூறியவுடன் ராஜாஜி அதை முழு மனத்துடன் வரவேற்றார். சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற சுதந்திரக் கட்சிப் பொதுக் கூட்டத்தில் ராஜாஜி விடுத்த அறைகூவல் அனைவரின் ஆழ்ந்த கவனத்துக்கும் உரியது. ஹிட்லரை எதிர்க்கும்போது நேசநாடுகள் பேச்சு வார்த்தைகளில் பொழுதை வீணடிக்காமல், உடனடியாக ஒன்று சேர்ந்து காரியத்தில் இறங்கின; அவ்விதமே இப்போது இந்நாட்டில் சர்வாதிகாரம் செலுத்தி வரும் ஸ்ரீமதி இந்திரா கோஷ்டியை எதிர்க்கும் விஷயமாக ஜனநாயகக் கட்சிகள் பேச்சு வார்த்தைகளில் காலத்தை விரயம் செய்யாமல், யுத்த கால அவசர உணர்வுடன் உடனடியாக ஒன்று சேர்ந்து எதிர்ப்பைக் காட்ட வேண்டும் என்றார் ராஜாஜி. அன்று மகாத்மா காந்தியின் தலைமையில் நாடு முழுவதும் ஒன்றுபட்டு எழுச்சி பெற்றுப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடியதுபோல், இன்று ஜனநாயகவாதிகள் அனைவரும் இந்திரா ஏகாதிபத்தியத்தை எதிர்க்க வேண்டும் என அழைப்பு விடுத்தார் ராஜாஜி. இதே வேண்டுகோளைச் சுதந்திரக் கட்சி ஓராண்டுக்கு முன்னரே தேசத்துக்கு விடுத்தது. அதன் அவசியத்தை இப்பொழுது ஜனசங்கமும் பழைய காங்கிரசும் ஒப்புக்கொண்டு செயலாக்குவதற்கு முன்வந்திருப்பது போற்றுதற்குரிய நிலைமை. இந்தப் பணி விரைவாக, திறம்பட நடந்தேற வேண்டும் என்பதில் ராஜாஜி வெகு தீவிரமாக இருந்து வருகிறார். பேரம் பேசுவதற்கு இது தருணமல்ல என்ற கருத்தில், கூட்டு முயற்சிக்கான ஏற்பாடுகளை உருவாக்கும்படி சுதந்திரக் கட்சி ஸ்ரீ மஸானிக்கு அதிகாரம் அளித்திருக்கிறது. காலம் கடத்தாமல் பார்லிமென்டில் சேர்ந்துழைப்பதற்கு மூன்று கட்சிகளும் இப்போது முனைந்தாக வேண்டும்.

இந்த மூன்று கட்சிகளும் முக்கியமான பிரச்னைகள் மீது பார்லிமென்டில் ஒத்துழைப்பது முற்றிலும் சாத்தியமே. இவை மூன்றும் சேர்ந்துழைத்தால் எதிர்ப்புக் கூட்டணி கனிசமான பலமுள்ளதாக விளங்கும். தேச நலனைப் பாதிக்கின்ற அடிப்படை விஷயங்களில்

வேறு சில கட்சிகளும் அவற்றுடன் சேர்ந்து கொள்ளக் கூடும். பார்லிமென்டில் தொடங்குகின்ற ஒத்துழைப்பு வெளியேயும் விரிவு கண்டு, தேர்தல் காலக் கூட்டணி யாகவும் உருப்பெற இயலும்.

தேசத்தை எதிர்நோக்கி இருக்கின்ற பிர தானப் பிரச்னைகள் இரண்டு. வளர்ந்து வரு கின்ற கம்யூனிஸ்ட் ஆதிக்கத்தையும், வன் செயல்களையும் அடக்கிச்சட்டத்தையும்.அமை தியையும் நிலைநாட்டுவது முதன்மையான பணி. இரண்டாவது பணி ஸ்ரீமதி இந்திரா காந்தி கம்யூனிஸ்ட் ஆதரவுடன் தோற்று விக்கப் பார்க்கும் சர்வாதிகார ஆட்சிக்கான முயற்சிகளைத் தகர்த்து எறிகின்ற பணி. இவை இரண்டும் அடிப்படையானவை. மற்ற எந்த வேறுபாடும் இந்தப் பணிகளுக்குக் குறுக்கே நிற்கும்படி தேசபக்தியுள்ள எந்தக் கட்சியும் அனுமதிக்காது. இவை இரண்டும்தான் பிர தானப் பணிகள் என்பதைத் திருப்பதியில் கூடிய தென் பிராந்திய பழைய காங்கிரஸ் தலைமையினர் தெளிவாக எடுத்துக் காட்டி யிருக்கின்றனர். பிரதம மந்திரி வகுப்புவாத எதிர்ப்புப் பிரசாரம் செய்யும் விதம் வகுப்பு வாதத்தை வளர்க்கத்தான் துணை புரிகிறது என்றும் அவர்கள் சுட்டிக் காட்டியிருக்கி றார்கள். கம்யூனிஸ்டுகள் ஆதரவில் இந்திரா சர்க்கார் இயங்குவதால் இத்தேசம் கம்யூ னிஸ்ட் சார்பு நாடாகி விடக் கூடிய அபாயம் உண்டாகியுள்ளது. கம்யூனிஸ்ட் ஆக்கிரமிப் பையும் இது ஊக்கக்கூடியது. ஆகையால்தான் ராஜாஜி விடாது செய்து கொண்டிருக்கும் எச்சரிக்கைக்கு மதிப்புக் கொடுத்து தேசிய ஜனநாயகக் கட்சிகளின் கூட்டணியை நாட் டுப் பற்றுள்ள தலைவர்கள் உருவாக்க முற் பட்டுள்ளார்கள். அவர்களது சீரிய முயற்சிகள் சிறந்துமிக்கோங்குக என்று வாழ்த்துகிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

''மதச் சார்பற்ற சமுதாயம்'' என்ற புதிய சொற்றொடர் சமீப காலமாகப் புழக்கத்தில் இருந்து வருகிறது. இந்தியா அடைய வேண் டிய இலக்கு இதுவே என்று வற்புறுத்து கிறார்கள். 'மதச் சார்பின்மை' என்ற சொல் லுடன் புதிதாகத் தலைதூக்கியுள்ள இந்தச் சொற்றொடர் குழப்பம் அதிகரிப்பதற்குத் தான் பயன்படும். எந்தக் கட்சி ஆதிக்கம் செலுத்தினாலும், மத்தியிலும், மாநிலங் களிலும் பதவி வகிக்கின்ற **சர்க்கார்கள்,** எல்லா மதத்தினரையும் நியாயமாகவும் நேர் மையாகவும் நடத்துவதற்குக் கடமைப்பட்ட வர்கள். ஆனால் **சமுதாயம்** மதச்சார்பற்ற தாகவேண்டும் என்று கோருவதோ எதிர் பார்ப்பதோ அபத்தம். அது விவேகமற்றது.

நல்லொழுக்கத்தையும், நன்னடத்தையை யும் பாதுகாத்து வளர்ப்பதுதான் இந்தியா வில் உள்ள பல்வேறு சமயங்களின் பணி. கம்யூனிஸ்டுகளைத் தவிர நல்ல புத்தியுள்ள எந்த இந்தியனும் சமயத்தை அழித்துவிட வேண்டும் என்று சொல்ல மாட்டான். அதை அழிக்கவும் முடியாது.

அரசாங்கம் எந்த ஒரு சமயத்துடனும் இணைந்ததாக இருக்கக் கூடாது. ஆனால் சமுதாயத்தின் பிரிவுகள் ஏதாவது ஒரு சமயம் விதிக்கிற வகையில் கடவுளை நினைந்து வணங் குத்தான் வேண்டும். இல்லாவிடில் குழப்பம் மலிந்து விடும்; அல்லது ஒரு சர்வாதிகார ஆட்சி வந்துவிடும்.

★

அமெரிக்க ஆதரவில்லாமல் தம்மைப் பாது காத்துக் கொள்வதற்கு ஆசிய நாடுகளால் முடியுமா என்று ஃபிலிப்பின்ஸ் அதிபரைச் சென்ற வருடம் ஒரு நிருபர் கேட்டார். ஃபிலிப்பின்ஸ் அதிபர் மார்க்கோஸ் தந்த பதில் இதுதான்: ''முடியாது. ஆசிய நாடுகள் தனியாகவோ பல நாடுகள் சேர்ந்தோ கம்யூனிஸ்ட் சீனாவின் ராணுவ வலிமைக்கு ஈடு கொடுக்கும் தகுதியுடன் இல்லை. ஆசியா அனைத்தையும் தன் அரவணைப்பில் வைத்துக் கொண்டு பாதுகாக்க அமெரிக்க உதவி தேவையேயாகும்.......ஆசிய நாடுகள் ராணுவ பந்தோபஸ்தை முன்னிட்டுத் தமது வசதிகளை ஒன்று திரட்ட வேண்டி யதுதான். ஆனால் அத்தகைய பிராந்திய பாதுகாப்புத் திட்டம் போதுமானதாக இராது...''

## திருக்கருகாவூர் திருப்பணி

தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருக்கருகாவூர் புராதனப் புகழ் பெற்ற க்ஷேத்திரமாகும். அங்கு கோயில் கொண்டுள்ள ஸ்ரீ கர்ப்பரக்ஷாம்பிகையின் அநுக் கிரக சக்தி பிரசித்தி பெற்றது. கர்ப்பரக்ஷா சமேத முல்லைவனநாத சுவாமி ஆலயத் தைச் சேர்ந்த ஸ்ரீ கௌதமேசுவரர் கோவிலுக்குத் தற்போது திருப்பணி தொடங்கப் பட்டுள்ளது. நாட்டின் துர்பிட்சமும் பஞ்சமும் நீங்க ஸ்ரீ கௌதமேசுவரர் கைங்கரியம் முக்கியமாகக் கூறப்படுகிறது. மேற்படி திருப்பணிக்கு ஆஸ்திக அன்பர்கள் கீழ்க்காணும் முகவரிக்குப் பொருள் அனுப்பக் கோருகிறோம்: ஸ்ரீ டி. எஸ். கோபா லய்யர், மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீ முல்லைவனநாத சுவாமி தேவஸ்தானம், திருக் கருகாவூர், பாபநாசம் தாலுகா, தஞ்சை மாவட்டம்.

# என்ன சேதி?

## மகிழ்ச்சி தரும் 'சங்கடம்'

சுதந்திரக் கட்சியும் ஸ்தாபன காங்கிரசும் ஜனசங்கமும் கூட்டணி அமைக்க உத்தேசித்திருப்பது சங்கடம் தருவதாகப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி கூறியுள்ளார். பிரதமருக்குச் 'சங்கடம்' உண்டாகியிருப்பதே நல்ல அறிகுறி என்று ராஜாஜி கருதுகிறார். எதிர்ப்புக் கூட்டணியின் சக்தியை இது குறிக்கிறது.

நக்ஸல்பாரி வன்முறை வலுப்பது கண்டு சங்கடப்படாத பிரதமருக்கு ஜனநாயகக் கட்சிகள் ஒன்று சேருவது சங்கடம் தருகிறது! நக்ஸல்பாரி வன்முறைகள் வெறும் நிலச் சீர்திருத்தக் கிளர்ச்சியாகவே பிரதமருக்குத் தோன்றுகிறது. லியட்காங்கின் பிரதியாகவே இந்தியாவில் நக்ஸல்பாரிகள் நாசவேலை செய்கின்றனர் என்பதையும் இந்த உணர்வுதான் எதிர்ப்புக் கூட்டணியை உருவாக்கியுள்ளது என்றும் பிரதமர் எப்போது உணருவாரோ?

## அனுமதி கிடைக்குமா ?

ஆந்திர மெட்ரிகுலேஷன் தேறிய மாணவர்களுக்குச் சென்னைக் கல்லூரிகளில் அனுமதி தர மறுத்ததால், ஆயிரக்கணக்கான மாணவர்கள் மேல் படிப்புக்கு வழியில்லாமல் அந்தரத்தில் பரிதாபமாகத் தொங்குகிறார்கள். தமிழகத்தில் உள்ளவர்கள் ஆந்திர மெட்ரிகுலேஷன் பரீட்சைக்குப் படித்து அங்கு போய் எழுதுவானேன் என்று கேட்கலாம். இதற்குக் காரணம், சென்னை சர்வகலாசாலை 21 வயதுக்கு மேற்பட்டவர்களையே மெட்ரிகுலேஷன் பரீட்சை எழுத அனுமதிக்கிறது. ஆந்திராவில் 16, 17 வயது மாணவர்கள் கூட எழுதலாம் என்றிருப்பதால் அங்கு சென்று எழுதுகின்றனர்.

தமிழக அரசு நடத்தும் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்குப் பதினைந்து வயதுக்கு மேற்பட்டவர்கள் - ஏதோ காரணங்களினால் பள்ளிப் படிப்பைத் தொடர முடியாதிருப்பவர்கள் - தனியாகப் படித்துப் பரீட்சை எழுதலாம் என்று அனுமதித்தால் எவ்வளவோ பிரச்னைகள் தீரும். பள்ளிக்கூடங்களில் இட நெருக்கடி கணிசமாகக் குறையும்.

## பாட புத்தகக் குளறுபடி

பள்ளிக்கூடங்கள் திறந்து ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டது. இன்னும் மாணவர்களுக்குப் புத்தகம் வந்து சேரவில்லை. ஆம், பாடப் புத்தகம் பிரசுரிக்கும் வேலையைச் சர்க்கார் எடுத்துக் கொண்டதன் விளைவு இது! மாணவர்களும் ஆசிரியர்களும் ஒரு காரியமும் இல்லாமல் தினமும் பள்ளிக்கூடம் போய் வருகிறார்கள். பாடப் புத்தகம் வெளியிடும் பொறுப்புத் தனியாரிடம் இருந்தபோது இப்படி எப்போதாவது ஏற்பட்டிருக்கிறதா?

இது தவிர சர்க்காரின் அங்கீகாரம் பெற்ற புத்தக வியாபாரிகள், தங்களிடம் வரும் சொற்பப் பாடப்புத்தகப் பிரதிகளைக் கள்ள மார்க்கெட்டில் அதிக விலை வைத்து விற்கிறார்கள் என்று எங்கும் ஒரே புகாராக இருக்கிறது.

## பதவி உயர்வு பெற்ற பாஸ்கரன்

கிராமபோன் கம்பெனியின் இங்கிலாந்துத் தலைமை ஸ்தாபனமாகிய ''எமி இன்டர்நேஷனல் ஸர்விஸஸ்'' என்ற ஸ்தாபனத்தின் நிர்வாக டைரக்டராக திரு பாஸ்கர மேனன் நியமிக்கப்பட்டிருக்கிறார். லண்டன்மா நகரில் உள்ளதும், முழுக்க முழுக்க ஆங்கிலேயர்களாலேயே நடத்தப்படுவதுமான இக் கம்பெனியின் நிர்வாக டைரக்டராக ஓர் இந்தியர் நியமிக்கப் பட்டிருப்பது இதுவே முதல் தடவையாகும். இது திரு பாஸ்கர மேனனின் தொழில் திறமைக்குச் சான்றாகும். ஆறு வருஷங்கள் கிராமபோன் கம்பெனியில் மானேஜிங் டைரக்டராக இருந்து அக்கம்பெனியில் இந்திய மக்களின் மூலதனத்தையும் முதலீடு செய்ய வழி வகை செய்து ''இந்திய கிராமபோன் கம்பெனி லிமிடெட்'' என்று அதை உயர்த்தி, அதன் தலைவராகப் பதவி வகித்துவருகிறார் திரு பாஸ்கர மேனன். ஏற்றுமதிமூலம் நாட்டுக்குச் செல்வம் திரட்ட வேண்டும் என்ற ஆர்வத்தில் வெகு சுறுசுறுப்புடன் இசைத்தட்டுக்களை ஏற்றுமதி செய்து வருகிறார். திரு பாஸ்கர மேனன் லண்டன் மாநகரில் தமது அலுவலகத்தை வைத்துக் கொண்டிருந்தாலும், இந்தியக் கம்பெனியின் தலைமைப் பதவியையும் தொடர்ந்து வகிப்பார். முப்பத்தாறு வயதே ஆன இந்த இளைஞர் உயர் பதவியில் மேலும் வெற்றிகளைக் காண வாழ்த்துகிறோம்.



திரு பாஸ்கர மேனன்

## வேண்டாத விருந்தாளி

தென்வியட்நாமின் கம்யூனிஸப் புரட்சி அரசின் வெளிவிவகார மந்திரி மாடம் பின்னுக்கு இந்தியாவில் தரப்பட்ட வரவேற்பு விசித்திரமானது, விபரீதமானது. தனிப்பட்டமுறையில் வெளிவிவகார மந்திரி ஸ்ரீ ஸ்வரண் சிங்கின் 'விருந்தாளி' என்று வேறக்கப்பட்டாலும், ஸ்ரீமதி இந்திராவின் கம்யூனிஸ சார்பினை அறிந்த அனைவரும் இதன் உட்பொருளை நன்கு உணருவர்.

வேறு சில கட்சிகளும் அவற்றுடன் சேர்ந்து கொள்ளக் கூடும். பார்லிமென்டில் தொடங்குகின்ற ஒத்துழைப்பு வெளியேயும் விரிவு கண்டு, தேர்தல் காலக் கூட்டணி யாகவும் உருப்பெற இயலும்.

தேசத்தை எதிர்நோக்கி இருக்கின்ற பிரதானப் பிரச்னைகள் இரண்டு. வளர்ந்து வருகின்ற கம்யூனிஸ்ட் ஆதிக்கத்தையும், வன்செயல்களையும் அடக்கிச்சட்டத்தையும், அமைதியையும் நிலைநாட்டுவது முதன்மையான பணி. இரண்டாவது பணி ஸ்ரீமதி இந்திரா காந்தி கம்யூனிஸ்ட் ஆதரவுடன் தோற்றுவிக்கப் பார்க்கும் சர்வாதிகார ஆட்சிக்கான முயற்சிகளைத் தகர்த்து எறிகின்ற பணி. இவை இரண்டும் அடிப்படையானவை. மற்ற எந்த வேறுபாடும் இந்தப் பணிகளுக்குக் குறுக்கே நிற்கும்படி தேசபக்தியுள்ள எந்தக் கட்சியும் அனுமதிக்காது. இவை இரண்டும்தான் பிரதானப் பணிகள் என்பதைத் திருப்பதியில் கூடிய தென் பிராந்திய பழைய காங்கிரஸ் தலைமையினர் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கின்றனர். பிரதம மந்திரி வகுப்புவாத எதிர்ப்புப் பிரசாரம் செய்யும் விதம் வகுப்புவாதத்தை வளர்க்கத்தான் துணை புரிகிறது என்றும் அவர்கள் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். கம்யூனிஸ்டுகள் ஆதரவில் இந்திரா சர்க்கார் இயங்குவதால் இத்தேசம் கம்யூனிஸ்ட் சார்பு நாடாகி விடக் கூடிய அபாயம் உண்டாகியுள்ளது. கம்யூனிஸ்ட் ஆக்கிரமிப்பையும் இது ஊக்கக்கூடியது. ஆகையால்தான் ராஜாஜி விடாது செய்து கொண்டிருக்கும் எச்சரிக்கைக்கு மதிப்புக் கொடுத்து தேசிய ஜனநாயகக் கட்சிகளின் கூட்டணியை நாட்டுப் பற்றுள்ள தலைவர்கள் உருவாக்க முற்பட்டுள்ளார்கள். அவர்களது சீரிய முயற்சிகள் சிறந்துமிக்கோங்குக என்று வாழ்த்துகிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

''மதச் சார்பற்ற சமுதாயம்'' என்ற புதிய சொற்றொடர் சமீப காலமாகப் புழக்கத்தில் இருந்து வருகிறது. இந்தியா அடைய வேண்டிய இலக்கு இதுவே என்று வற்புறுத்துகிறார்கள். 'மதச் சார்பின்மை' என்ற சொல்லுடன் புதிதாகத் தலைதூக்கியுள்ள இந்தச் சொற்றொடர் குழப்பம் அதிகரிப்பதற்குத்தான் பயன்படும். எந்தக் கட்சி ஆதிக்கம் செலுத்தினாலும், மத்தியிலும், மாநிலங்களிலும் பதவி வகிக்கின்ற **சர்க்கார்கள்,** எல்லா மதத்தினரையும் நியாயமாகவும் நேர்மையாகவும் நடத்துவதற்குக் கடமைப்பட்டவர்கள். ஆனால் **சமுதாயம்** மதச்சார்பற்றதாகவேண்டும் என்று கோருவதோ எதிர்பார்ப்பதோ அபத்தம். அது விவேகமற்றது.

நல்லொழுக்கத்தையும், நன்னடத்தையையும் பாதுகாத்து வளர்ப்பதுதான் இந்தியாவில் உள்ள பல்வேறு சமயங்களின் பணி. கம்யூனிஸ்டுகளைத் தவிர நல்ல புத்தியுள்ள எந்த இந்தியனும் சமயத்தை அழித்துவிட வேண்டும் என்று சொல்ல மாட்டான். அதை அழிக்கவும் முடியாது.

அரசாங்கம் எந்த ஒரு சமயத்துடனும் இணைந்ததாக இருக்கக் கூடாது. ஆனால் சமுதாயத்தின் பிரிவுகள் ஏதாவது ஒரு சமயம் விதிக்கிற வகையில் கடவுளை நினைந்து வணங்கத்தான் வேண்டும். இல்லாவிடில் குழப்பம் மலிந்து விடும்; அல்லது ஒரு சர்வாதிகார ஆட்சி வந்துவிடும்.

★

அமெரிக்க ஆதரவில்லாமல் தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்கு ஆசிய நாடுகளால் முடியுமா என்று ஃபிலிப்பீன்ஸ் அதிபரைச் சென்ற வருடம் ஒரு நிருபர் கேட்டார். ஃபிலிப்பீன்ஸ் அதிபர் மார்க்கோஸ் தந்த பதில் இதுதான்: ''முடியாது. ஆசிய நாடுகள் தனியாகவோ பல நாடுகள் சேர்ந்தோ கம்யூனிஸ்ட் சீனாவின் ராணுவ வலிமைக்கு ஈடு கொடுக்கும் தகுதியுடன் இல்லை. ஆசியா அனைத்தையும் தன் அரவணைப்பில் வைத்துக் கொண்டு பாதுகாக்க அமெரிக்க உதவி தேவையேயாகும்.......ஆசிய நாடுகள் ராணுவ பந்தோபஸ்தை முன்னிட்டுத் தமது வசதிகளை ஒன்று திரட்ட வேண்டியதுதான். ஆனால் அத்தகைய பிராந்திய பாதுகாப்புத் திட்டம் போதுமானதாக இராது...''

## திருக்கருகாவூர் திருப்பணி

தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருக்கருகாவூர் புராதனப் புகழ் பெற்ற க்ஷேத்திரமாகும். அங்கு கோயில் கொண்டுள்ள ஸ்ரீ கர்ப்பரக்ஷாம்பிகையின் அநுக்கிரக சக்தி பிரசித்தி பெற்றது. கர்ப்பரக்ஷா சமேத முல்லைவனநாத சுவாமி ஆலயத்தைச் சேர்ந்த ஸ்ரீ கௌதமேசுவரர் கோவிலுக்குத் தற்போது திருப்பணி தொடங்கப்பட்டுள்ளது. நாட்டின் துர்பிட்சமும் பஞ்சமும் நீங்க ஸ்ரீ கௌதமேசுவரர் கைங்கரியம் முக்கியமாகக் கூறப்படுகிறது. மேற்படி திருப்பணிக்கு ஆஸ்திக அன்பர்கள் கீழ்க்காணும் முகவரிக்குப் பொருள் அனுப்பக் கோருகிறோம்: ஸ்ரீ டி. எஸ். கோபாலய்யர், மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீ முல்லைவனநாத சுவாமி தேவஸ்தானம், திருக்கருகாவூர், பாபநாசம் தாலுகா, தஞ்சை மாவட்டம்.

# அன்பார்ந்த நேயர்களுக்கு



'கோகுலாஷ்டமிக்கும் குலாம் காதருக்கும் என்ன சம்பந்தம்?' என்று கேட்பது கூடப் பொருத்தமாக இருக்கலாம். ஆனால் 'மாலேதுங்குக்கும் மஞ்சக்குடி கிராமத்துக்கும் என்ன சம்பந்தம்?' என்று இனி யாரும் கேட்க முடியாது. பீகிங் சர்வாதிகாரத்தின் பகாசுரப் பசி புலியூர்க் கிராமத்திலும் இன்று இரை தேடுகிறது. இந்த அசுரப் பசியின் அளவையும் பயங்கரத்தையும் படம் பிடித்துக் காட்டுகிறது **'போராட்டங்கள்'** என்ற நாவல். இன்று பாரத நாட்டை எதிர் நோக்கியிருக்கும் பிரச்னைகளுள் மிக முக்கியமான ஒன்றினை அலசும்போது திரு ர. சு. நல்லபெருமாள் தாம் நாவல் எழுதுகிறோம் என்பதையும் மறந்து விடவில்லை. வாசகர்களில் இரும்பு இதயம் படைத்தவர்களைக் கூடக் காந்தம்போல் ஈர்த்து விடக்கூடிய கதாபாத்திரங்களைக் கொண்டது 'போராட்டங்கள்.' மென்மையான மனம் படைத்தவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

'போராட்டங்கள்' என்ற இந்த நாவலைத் தவிர கல்கியில் வேறு பல புதிய அம்சங்களும் இந்த இதழிலிருந்து ஆரம்பமாகின்றன. கோமதி சுவாமிநாதன் — ராமு ஆகியோரின் கூட்டு முயற்சியில் உருவாகியுள்ள **சிதம்பர ரகசியம்** என்ற நகைச்சுவைச் சித்திரத் தொடர்கதை கலகலப்பாகத் தொடங்கியிருக்கிறது. மூத்த எழுத்தாளர் பொன்னுத்துரை **கீதைக் கதைகள்** என்ற தலைப்பில் கீதை வாசகங்கள் பலவற்றுக்குக் குட்டிக் கதைகள் மூலமாக அழகிய விளக்கம் தருகிறார். இன்னும் **மண்ணின் மாண்பு. இவருக்கு இதுவும் தெரியும்** போன்ற அம்சங்கள் சுவாரசியமான நல்விருந்துக்கு உறுதுணையாக அமையும்.

தமிழகத்தின் முதல் தர எழுத்தாளர்களின் நாவல்கள், பாரத நாட்டின் தலைசிறந்த எழுத்தாளர்களின் சிறுகதைகள், உலகத் தலைவராம் ராஜாஜியின் உன்னதக் கருத்துக்கள் ஆகியவற்றைத் தாங்கி வெளிவரும் கண்ணிய மிக்க உங்கள் கல்கி பத்திரிகை பெருமிதத்தோடு தனது பயனுள்ள வாழ்க்கையின் முப்பதாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது. நேயர்களின் நல்வாழ்த்துக்களைக் கோருகிறேன்.

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளின் பாத கமலங்களை நினைந்து முப்பதாம் ஆண்டின் முதல் கல்கி இதழை விநாயகப் பெருமானின் திருவடிகளில் சமர்ப்பித்து வணங்குகிறேன்.

சதாசிவம்





சென்ற ஜூலை மாதம் 19ம் தேதி திரு காமராஜின் பிறந்ததின விழாவில் கலந்து கொள்ளத் தில்லியிலிருந்து வந்திருந்த ஆசார்ய கிருபளானி, கல்கி ஆசிரியர் ஸ்ரீ சதாசிவம் அவர்களின் இல்லத்தில் தங்கியிருந்தார். அவ்வமயம், ஸ்ரீ சதாசிவம் ஒரு விருந்தளித்தார். அவ் விருந்திறுக்குத் தலைவர் திரு காமராஜ், திரு எம். ஆர். மஸானி, திரு சஞ்சீவி ரெட்டி ஆகியோரும் மற்றும் பல பிரமுகர்களும் வந்திருந்தனர்.





< மறு நாள் ஜூலை 20ம் தேதி 'கல்கி' அலுவலகத்தில் சுதந்திரக் கட்சியின் தேசிய நிர்வாகக் குழு கூடிற்று. ராஜாஜியை ஸ்ரீ சதாசிவம் அழைத்து வருகிறார்.

நிர்வாகக் குழு உறுப்பினர்கள் ராஜாஜியின் யோசனைகளை ஆர்வத்துடன் கேட்கின்றனர். V





ஜூலை 21, 22 தேதிகளில் சுதந்திரக் கட்சியின் பொதுக் குழு உறுப்பினர்கள் கூடி, ஸ்தாபன காங்கிரஸ் விடுத்த கோரிக்கையை ஆதரித்து முக்கியமானதொரு தீர்மானம் நிறைவேற்றினர்.

அதைத் தலைவர் ராஜாஜியே பிரேரேபித்தார். சுதந்திரக் கட்சி, ஸ்தாபன காங்கிரஸ், ஜனசங்கம் ஆகிய கட்சிகளின் மக்கள் சபை அங்கத்தினர்கள் இணைந்து ஒரு குழுவாக ஒரு தலைவரின் கீழ் பலமான எதிர்க்கட்சியாக இயங்க வேண்டும் என்பது அத்தீர்மானம். அத்தீர்மானத்தை ஏகமனதாகச் சுதந்திரக் கட்சி பொதுக் குழு உறுப்பினர்கள் வரவேற்றனர்.



சென்னை தாசப்பிரகாஷ் ஓட்டலில் நடைபெற்ற இக் கூட்டத்தில் ராஜாஜி பேசுவதையும் அருகே ஆசார்ய ரங்கா, எம். ஆர். மசானி ஆகியோர் வீற்றிருப்பதையும் பொதுக்குழு உறுப்பினர்கள் கவனமாகத் தலைவரின் பேச்சைக் கேட்பதையும் படங்களில் காணலாம்.





போட்டோ : கே. விசுவநாதன்

# இயற்கையான அழகுடன் திகழ



## ஆஷா

### அழகு சாதனங்கள்






புதிய பார்முலா கொண்ட ஆஷா முகப்பவுடர் உங்கள் வதனத்தின் இயற்கைப் பொலிவைப் பரிமளிக்கச் செய்து, உங்கள் சருமத்திற்கு மணிக்கணக்காக நீடித்திருக்கும் மென்மைமிகு பிரகாசத்தை அளிக்கிறது.
இந்த நான்கு கோலாகலமான வர்ணங்களிலிருந்து, உங்கள் வதனத்திற்கு இணையானதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்—இயற்கை, ராச்சேல், பீச் மற்றும் வெள்ளை. உங்கள் சருமத்தை இளமைப் பொலிவுடனும், மழமழப்பாகவும், செம்மையாகவும் வைத்திருக்க ஆஷா வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள். அது இயற்கையான அழகுத் தோற்றத்தைத் தருவதற்கு சிறந்த பவுடர் தளம்.
ஆஷா காஜல் (மை) உங்கள் கவர்ச்சிக்கண்களுக்குக்குளுமை தந்து, சோர்வைப் போக்குகிறது.
உங்களுடைய ஒப்பனைக்கு முழுமை தர, ஆஷா சாந்து உபயோகியுங்கள். மூன்று வெவ்வேறு வர்ணங்களில் நீர்மமாகவோ, பசையாகவோ கிடைக்கிறது.

# ஹெலிகாப்டர்கள்

## முன்கதைச் சுருக்கம்

"ஒவ்வொருத்தர் மாதிரி நீங்க இருக்கீங்களா? எனக்குப் பிடிச்சது ஒண்ணும் உங்களுக்குப் பிடிக்காது. எப்போதும் மௌனச் சாமியார் மாதிரி ஒரு புஸ்தகத்தை வைச்சுக்கிட்டு உட்கார்ந்துவிடறீங்க! எங்கேயாவது கூட்டிக்கிட்டுப் போங்கன்னு, பலிபீடத்துக்குப் போற ஆடு மாதிரி வர்றீங்க. ஓர் உற்சாகம், பொண்டாட்டியோட போறோமேன்னு சந்தோஷம்... ஊஹூம்! ஊஹூம்!" — இப்படிக் கூறும் திலகத்தை அமிர்தம் நாடகக் கொட்டகைக்கு அழைத்துச் செல்கிறான்.

நாடகத்தில் நடிக்கும் பானு அமிர்தத்தின் இளம் பிராயத்துக் காதலி நித்யாவைப் போலவே இருந்து அவனுக்குப் பழைய நினைவுகளைக் கிளறுகிறாள். அமிர்தம் நித்யாவின் நினைவில் ஆழ்ந்து விடுகிறான். திலகமோ நாடகத்தில் மூழ்கிப் போகிறாள்.

நாடகம் முடிந்து திலகமும் அமிர்தமும் காருக்கு வந்த பொழுது, 'தியேட்டர் குரூப்'பின் உதவித் தலைவர் வந்து, நடிகை பானுவை அவள் வீட்டில் கொண்டு விட முடியுமா என்று கேட்கிறார். மனைவியின் அனுமதி பெறாமலே அமிர்தம் ஒப்புக்கொண்டது அவளுக்குத் தப்பாகப்படுகிறது. போதாக்குறைக்கு வழி நெடுகப் பானுவைப் பற்றிக் கேட்டுக்கொண்டே வருகிறான் அமிர்தம்.

அவன் பேச்சிலிருந்து பானுவின் அம்மாவும் நடிகை என்பதை அவன் ஏற்கெனவே அறிவான் என்று தெரிய வருகிறது. தன்னிடம் இச்செய்தியை அமிர்தம் ஒளித்து வைத்ததாகக் குற்றம் சாட்டுகிறாள் திலகம்.

மற்றொரு நாள் அமிர்தம் ரவீந்திர பவனில் நடக்கும் சித்திரப் பொருட்காட்சிக்குத் தனியாகப் போய்த் திரும்பும்பொழுது பானுவோடு வருகிறான். பானுவின் நடவடிக்கைகளோடு நித்யா அந்நாட்களில் நடந்து கொண்ட விதத்தை இணைத்துப் பார்த்து மகிழும் அமிர்தம், அவளது குடும்ப வரலாற்றைக் கேட்டுத் தெரிந்து கொள்ள முயல்கிறான். 'இப்போ என்ன செய்கிறேன்னு கேட்காமே பழசையே கேட்டுக்கொண்டிருக்கிறேளே!' என்று குற்றம் சாட்டுகிறாள் நடிகை பானு.

அவள் தன் கடந்தகாலக் கதைபற்றிப் பேச விரும்பவில்லை என்பது அவனுக்குப் புரியாமல் போகவில்லை.

5

இந்திரா பார்த்தசாரதி

"ஐ ஆம் ஸாரி... உன் குடும்ப விஷயங்களைப் பத்தி நான் அநாவசியமாகக் கேட்டுக்கிட்டிருக்கேன்" என்றான் அமிர்தம்.

"தட் ஈஸ் ஆல்ரைட்... இப்போ என் அம்மா டான்ஸ் ஸ்கூல் நடத்தறா. நான் ரேடியோவிலே வேலையாயிருக்கேன்... டில்லிக்கு வந்து ஒரு வருஷமாகிறது" என்றாள் பானு.

"வந்த உடனேயே உனக்கு அல்லாட்மெண்ட் கிடைச்சிடுச்சே. ரொம்ப அதிர்ஷ்டக்காரி!"

பானு சிரித்தாள்.

"எதுக்குச் சிரிக்கிறே?"

"ஒரு சராசரி அரசாங்க உத்தியோகஸ்தர் மாதிரி நீங்க பேசறது ஆச்சர்யமாயிருக்கு..."

அமிர்தத்துக்கு வெட்கமாகப் போய் விட்டது. பன்னிரண்டு வருடங்களுக்கு முன்னால் இப்படிப் பேசியிருக்க மாட்டான். அவன் சாப்பிட்டுக் கொண்டிருந்த மெஸ்ஸில் 'இன்க்ரிமெண்ட்,' 'கன்ஃபர்மேஷன்', 'பிரமோஷன்ஸ் ரூல்' என்று சாப்பிடும் போது பேசிக்கொண்டிருப்பவர்களைப் பார்த்தால் அவனுக்கு எரிச்சலாக வரும்... 'வாழ்க்கையை அரசாங்க விஷயங்களுக்காக அர்ப்பணித்த அற்ப சந்தோஷிகள்' என்று அவன் நினைப்பதுண்டு. பானு சொன்னது அவன் முகத்தில் அறைந்தது போல் இருந்தது.

"எனக்கு வயசாகிண்டிருக்கு!" என்றான் அமிர்தம்.

"என்னது?"

"வயசாகிட்டிருக்கு. அதான் 'அல்லாட்மெண்ட்', 'ரிடையர்மெண்ட்'

# கீழே இறங்கி விட்டன



மாதிரி விஷயங்களைப் பத்தி யெல்லாம் பேசத் தோணுது... ஒரு பாதுகாப்பு வேணுமில்லையா?...''

தன்னைத் தானே வருத்திக் கொள்ள வேண்டுமென்பதற்காக அவன் இப்படிப் பேசினன். பானு பேசாமல் இருந்தாள். 'வயசாகிட்டிருக்கு' என்பதை அவள் மறுக்கக் கூடுமென்று அவன் எதிர்பார்த்தான். அவள் அமைதி அவனுக்கு ஏமாற்றத்தைத் தந்தது.

'''உங்கப்பா அப்புறம் மெட்ராஸ் வந்துட்டாரா?'ன்னு நீங்க கேட்ட கேள்விக்கு நான் பதில் சொல்லல்லே... அதுக்கு ஏன்னு நீங்க கேட்கவுமில்லே'' என்ருள் பானு.

''நான் கேட்பேன்னு எதிர்பார்த்தியா?''

''இன் ஃபாக்ட், இல்லே... ஆனு இப்போ அதுக்குப் பதில் சொல்லலாம்னு எனக்குத் தோணறது'' என்று சொல்லி விட்டு அவள் நிறுத்தினுள்.

அமிர்தம் பேசாமலிருந்தான்.

பானு சொன்னுள்: ''எங்கப்பாவுக்கும், அம்மாவுக்கும் ஒத்துக்கல்லே.... எங்கம்மா கல்யாணம் ஆன அப்புறமும் நடனம் ஆடறது எங்கப்பாவுக்குப் பிடிக்கலே. என்னை அழைச்சிண்டு எங்கம்மா மெட்ராஸ் வந்துட்டா...''

லட்சுமிபாய் நகர் வந்துவிட்டது. அமிர்தம் காரை ஓரமாக நிறுத்தினுன்.

''உங்களைச் சந்தித்த இரண்டாம் நாளே நான் இப்படிப் பேசறது உங்களுக்கு ஆச்சரியமா இல்லே?''



''இன் ஃபாக்ட், இல்லே...''

பானு புன்னகை செய்தாள்.

''நான் ஒரு கேள்வி கேட்கலாமா?'' என்றான் அமிர்தம்.

''தாராளமா...''

''உன் அநுதாபம் யாருக்கு, அம்மாவுக்கா, அல்லது அப்பாவுக்கா?''

'' அப்பாவுக்கு ... எனக்கு அம்மாவைக் கண்டால் அறவே பிடிக்காது...! வெறுக்கிறேன்!'' இதைச் சொல்லிவிட்டு அவள் 'விண்ட்ஸ்கிரீன்' வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். கண்களில் இயற்கையாக இருந்த குறுகுறுப்பு இப்போது காணவில்லே. தாடை இறுகியது. 'அம்மாவை வெறுக்கின்றேன்' என்று அவள் சொன்னது பொய்யில்லே என்று தெரிந்தது.

''உங்கப்பா இப்பொ எங்கே இருக்காரு?''

'' திருவாரூரிலே தான் இருந்தார், கடைசிமட்டும். அவர் போய் ஐந்தாறு வருஷமாகிறது...''

''நீ அவரைக் கடைசியாக எப்போ பார்த்தே?''

'' அம்மாவோட மெட்ராஸ் வந்தப்புறம் நான் பார்க்கவே இல்லே. கடைசியா பார்த்தபோது எனக்கு ஆறு வயசு!''

''மன்னிக்கணும்.... ஆறு வயசிலே உனக்கு உங்கப்பாவைப் பத்தி அதிகமாகத் தெரிஞ்சுக்கிட்டிருக்க முடியாது. அப்படியிருக்கிறப்போ உன் அநுதாபம் உங்கப்பாவுக்குன்னு எப்படி உன்னுலே சொல்ல முடியும்? உங்கம்மாவை உங்கப்பா எப்படி நடத்தினுர்னு உனக்கென்ன தெரியும்?''

''எங்கம்மாவோட இத்தனே வருஷமாப் பழகி வர்ற எனக்கு எங்கம்மா எங்கப்பாவை எப்படி நடத்தியிருப்பான்னு சொல்ல முடியும், இல்லியா?''

''நீ ரொம்பப் புத்திசாலிதான்!'' என்றான் அமிர்தம்.

'' போதும் ..... பாராட்டெல்லாம் எனக்கு வேண்டாம். இதை நான் என் புத்திசாலித்தனத்தைக் காட்டறதுக்காகச் சொல்லல்லே... எங்கம்மாவை விட்டு வந்துடணுங்கிறதுதான் என் ஆசை.... என்ன செய்யறதுன்னு புரியலே!''

அமிர்தம் திடுக்கிட்டான். இதை அவள் மிகவும் நிதானமாகச் சொன்னுள். பல வருஷங்களாக யோசித்து இம்முடிவுக்கு வந்தவள் போல், அவள் குரலில் ஓர் உறுதி தெரிந்தது.



''ஒரு பந்தத்தை உதறி எறிஞ்சுட்டுப் போறதுங்கறது சாதாரண விஷயமா?'' என்று அவன் கேட்டான்.

''எங்கம்மாவுக்கு இருந்த துணிச்சல் எனக்குக் கூடாதா?''

''இரண்டாம் நாளே நிறையப் பேசி விட்டோம்னு நினைக்கிறேன்...'' என்றான் அமிர்தம்.

''உங்களுக்கு நேரமாகிறது. அப்படித் தானே?'' என்று சொல்லிக் கொண்டே கார்க் கதவைத் திறந்தாள் பானு.

''இல்லே.... அதுக்குச் சொல்லலே நான். பல விஷயங்களைப் பத்தி வெளிப் படையாவே நீ பேசிட்டேன்னு சொல்ல வந்தேன்.''

பானு காரை விட்டு இறங்கினாள். ''வீட்டுக்கு வரீங்களா?''

அமிர்தம் தயங்கினான்.

''எங்கம்மாவைப் பத்தி நான் சொன்னதை வைச்சுண்டு நீங்க தயங்க வேண்டாம். பரவாயில்லே, வாங்கோ...என் 'பெயிண்டிங்ஸ்'ஸைப் பார்க்க வேண்டாமா?''

''அடடா! அதை மறந்தே போயிட்டேனே!'' என்று சொல்லியவாறு காரை விட்டு இறங்கினான் அமிர்தம்.

''அன்னிக்கு நீங்க என்னைக் கொண்டு விட்டதை உங்க மனைவி விரும்பலே இல்லியா?''

''உண்மையைச் சொல்லப் போனா, ஆமாம் என்கிறதுதான் பதில்.''

''நான் அப்படித்தான் நினைச்சேன்... 'பை தி வே' உங்களுக்கு எவ்வளவு குழந்தைகள் ?''

அமிர்தம் புன்னகையுடன் பதில் சொன்னான். ''ஏன் 'பை தி வே'? நேராகவே நீ கேட்கலாம். எனக்குக் குழந்தைகள் கிடையாது...மறுபடியும் 'நான் அப்படித்தான் நினைச்சேன்' என்று சொல்லாதே. அது கொடுமை!''

வீட்டை அடைந்ததும், 'பெல்'லை அழுத்தினாள் பானு. கதவைத் திறந்த பானுவின் தாய், அமிர்தத்தைப் பார்த்து விட்டுச் சற்றுக் குழம்பினாள்.

''உள்ளே வாங்கோ'' என்றாள் பானு.

உள்ளே வந்ததும் பானு அமிர்தத்தை அவன் அம்மாவுக்கு அறிமுகப் படுத்தி வைத்தாள். 'ஹெல்த் மினிஸ்டிரியில் டெபுடி செகரட்டரி' என்று தன்னை அவன் அறிமுகப்படுத்தியபோது அமிர்தம் கொஞ்சம் வியப்படைந்தான். தன்னைப் பற்றிப் பானு விசாரித்து அறிந்திருக்கிறாள் என்று உணர்ந்தான்.

பானுவின் தாயார் ஒரு காலத்தில் அழகாக இருந்திருக்க வேண்டுமென்று அவள் முகம் காட்டியது.

''இதோ வந்துவிட்டேன்'' என்று கூறிவிட்டு, பானு உள்ளே போனாள்.

''இப்படி உட்காருங்கோ'' என்று ஒரு நாற்காலியைச் சுட்டிக் காட்டினாள் பானுவின் அம்மா.

அவள், எதிர்த்தாற்போல் போடப் பட்டிருந்த ஒரு 'மோடா'வில் உட்கார்ந்தாள். வீட்டில் இருக்கும்போது கூட அவள் சற்று மிகைப்பட்ட 'மேக்-அப்' புடன் இருந்தது அமிர்தத்துக்குச் சிறிது ஆச்சரியத்தைத் தந்தது. மிகவும் சக்தி வாய்ந்த கண்கள். நாட்டியத்தின் நிறைந்த அனுபவம் முக பாவனையில் தெரிந்தது. ஆளை எடுத்த எடுப்பிலேயே வசீகரிக்கக் கூடிய புன்னகை. இளமையில் இவள் எப்படி இருந்திருப்பாள்!... ஒரு குறுகிய இடமாகிய திருவாரூரில் 'அடைந்து கிட' என்று இப்பேர்ப்பட்ட அழகியிடத்தில் சொன்னால், அவள் எப்படி இருப்பாள்? அதுவும் ஒரு பள்ளி ஆசிரியருடன்!... புதிய இடங்களை ஜெயிக்க அவள் பட்டினப் பிரவேசம் செய்திருக்கிறாள்!

பானுவுக்கும் அவள் தாயாருக்கும் இடையே சுமுகமான உறவு இல்லை என்பதில் ஆச்சரியமில்லை. பானு தன்னைத் தந்தையின் மகளாகப் பாவித்துக் கொண் டிருக்கலாம். கண்ணெதிரே காணும் தாயாரை வெறுக்கும் எந்த மகளும், காணாத தந்தையை இலட்சியப் படுத்தி ஒரு 'ஃபாதர் இமேஜ்'ஜில் பாதுகாப்பை நாடுவதுதான் இயற்கை.

பானு காப்பியைக் கொண்டுவந்தாள்.

''ஓ... தாங்க்யூ....பெயிண்டிங்ஸ்?'' என்று கேட்டான் அமிர்தம்.

''பாராட்டைப் பெற லஞ்சம் வேண்டாமா? அதுக்குத்தான் காப்பி!''

அமிர்தம் காப்பியைப் பருகினான்.

''எத்தனை மோசமான படமாக இருந்தாலும் இந்தக் காப்பியைக் குடிச்சிட்டுப் படம் நல்லா இல்லேன்னு சொன்னா அது பாவம்...'' என்றான்.

''ஓ!...இப்போ காப்பியைப் பற்றி நீங்க சொல்றது நிஜமா, பொய்யா?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே போனாள் பானு.

''நல்ல பொடி இல்லே.... எப்படி நன்னாயிருக்க முடியும்?'' என்றாள் பானுவின் அம்மா.

''இல்லே. காப்பி நிஜமாகவே முதல் தரம்!''

இவ்வாறு கூறிக் கொண்டே மேஜையின் மீதிருந்த ஒரு நினைவு மலரை எடுத்துப் புரட்டினான். அதில் பானுவின் அம்மா படம் வந்திருந்தது. பெயர் ஜானகி ராமச்சந்திரன். கரோல்பாக்கில் ஒரு நாட்டிய நாடகம் நடந்தபோது வெளியிடப்பட்ட 'மலர்' அது.

''பானுவுக்கு உங்களை எப்படித் தெரியும்?'' என்று கேட்டாள் ஜானகி.

''அன்னிக்கு நாடகத்துக்குப் போயிருந்தேன். நான் பானுவைக் காரில் கொண்டு வந்து விட்டேன்... பானு சொல்லலியா?''

''இல்லே... நீங்க இருக்கிற இடம்?''

''கித்வாய் நகர்.''

''பக்கந்தான். குடும்பத்தோட இருக்கேளா?''

''ஆமாம்... நானும் என் மனைவியும் தான். குழந்தை குட்டி கிடையாது.''

''இப்பொத்தான் கல்யாணமாச்சா?''

அமிர்தம் சிரித்தான். ''என்னைப் பார்த்தா இப்பத்தான் கல்யாணம் ஆனவன் மாதிரியா தோணுது? கல்யாணமாகி ஒரு மாமாங்கம் ஆவுது.''

''அப்படியா?'' ஜானகி தன் குரலில் தோற்றுவித்த வியப்பு போலித்தனமானது என்று அமிர்தத்துக்குப் புரிந்தது.

அப்பொழுது பானு தான் தீட்டிய ஓவியங்களைக் கொண்டு வந்தாள்.

''ஓ... உன் படங்களா?'' ஜானகியின் குரலில் பாதிப் பெருமை, பாதி ஏளனம்!

படங்களில் சில சராசரித் தரத்துக்குச் சற்று அதிகமாகவே இருந்தன.

''யு ஹாவ் தி ஃப்ளார்'' என்றான் அமிர்தம்.

''ரியலி? தாங்க்யூ'' என்றாள் பானு.

''காப்பி லஞ்சமில்லே. காப்பியும் சரி இந்தப் படங்களைப் பார்க்கக் கொடுத்து வைத்த அநுபவமும் சரி, இரண்டுமே லஞ்சம்...''

''எதுக்காக லஞ்சம்?'' என்றாள் பானு.

''தெரியல்லே.'' அவன் தோள்களைக் குலுக்கிக் கொண்டே எழுந்திருந்தான்.

''என்ன, புறப்பட்டுட்டேளா?'' என்று கேட்டாள் ஜானகி.

''ஆமாம். நேரமாகிறது.''

''அவங்களையும் அழைச்சுண்டு ஒரு நாள் வாருங்களேன்'' என்றாள் ஜானகி.

''வரேன்.''

பானு அவனுடன் கார் வரையில் வந்தாள்.

''அப்புறம் எப்போப் பார்க்கலாம்?'' என்றான் அமிர்தம்.

அவள் பதில் சொல்லவில்லை.

''நாளைக்கு ஞாயிற்றுக் கிழமை தானே, சாயந்திரம் பார்க்கலாமா?''

அவள் அதற்கும் பதில் சொல்லவில்லை.

''மன்னிச்சுக்கோ. உனக்கு இஷ்டமில்லேன்னு...'' அவள் இடைமறித்தாள்: ''உங்க வீட்டுப் ஃபோன் நம்பர் என்ன? நான் ஃபோன் பண்ணறேன்...''

அவன் சொன்னான். அவள் அதை இரண்டு தடவை சொல்லிப் பார்த்துக் கொண்டாள்.

''டாடா... பை, பை...''

அவன் கார் லட்சுமி பாய் நகரின் கோடியை அடையும் வரையில் அவள் அங்கேயே நின்று கொண்டிருந்தாள்.

* * *

**அ**மிர்தத்துக்குத் திடீரென்று பன்னிரண்டு வருஷங்களை உதறித் தள்ளி விட்ட சந்தோஷம். ஆனால் தான் திரும்ப அடைந்து விட்டதாக நினைக்கும் அந்த மன நிலைக்குத் தனது பௌதிகம் ஈடு கொடுக்குமா? இது ஒரு பரிசோதனை... மாறுதலில்லாமல் போய்க்

---

✿ ✿ ✿

மருத மரத்தை ஸ்தல விருக்ஷமாகக் கொண்ட பாடல் பெற்ற ஸ்தலம் திருவிடைமருதூர். வரகுண பாண்டியனின் சோழப் பிரம்மஹத்தியை நீக்கிய பெருமை பெற்ற க்ஷேத்திரம். மத்யார்ஜுனம் என்று புகழ்பெற்ற இவ்வாலயத்துக்குப் பல லட்ச ரூபாய்ச் செலவில் மகா கும்பாபிஷேகம் வெகு விமரிசையாக ஜூலை 15-ந் தேதி நடைபெற்றது. தருமபுரம், திருவாவடுதுறை, மதுரை ஆதீனகர்த்தர்கள் இக் கும்பாபிஷேக வைபவத்தில் கலந்துகொண்டனர்.

✿ ✿ ✿



கொண்டிருந்த வாழ்க்கைக்குத் தேவையான மாறுதல்.

பானு, நித்யா மாதிரி இருக்கிறளா, அல்லது இதுவும் தன்னுடைய உள் மனம் கற்பித்துக் கொண்ட ஒன்ரு?

அவன் வீட்டுக்குச் சென்றபோது திலகம் விளக்கைக்கூட ஏற்றவில்லை. வீடு இருட்டாக இருந்தது. அவன் கதவைத் திறந்தபோது, அவள் கேசம் கலைந்திருந்த நிலையினின்றும் அவள் படுத்துக் கொண்டிருந்திருக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றிற்று.

அவன் உள்ளே சென்று விளக்கைப் போட்டான். மேஜையின் மீது சாயந்திரம் வந்த 'ஹிந்து'ப் பத்திரிகை கிடந்தது. அதைக் கையில் எடுத்துக்கொண்டு பால்கனிக்குச் சென்ருன்.

திலகம் காப்பியைக் கொண்டு வந்து அவனருகில் வைத்தாள்.

''காப்பி வேண்டாம்.''

அவள் காப்பியை எடுத்துக்கொண்டு உள்ளே போய்விட்டாள். அவளுடைய மௌனம் அவனுக்கு எரிச்சலைத் தந்தது. இது ஏன் என்று அவனுக்குப் புரியவில்லை.

மறுபடியும் உள்ளே விளக்கு அணைந்தது. அவள் படுத்துக் கொண்டுவிட்டாள் போலிருக்கிறது.

திலகம் ஏன் இப்படி இருக்கிறள்? கல்யாணமான பிறகு வாழ்க்கையில் 'கவர்ச்சி'க்கு இடமில்லை என்று நினைக்கும் முட்டாள்தனமான எண்ணம். முப்பது வயதாகி விட்டால் தன்னை வயோதிகத்துக்குத் தயார் செய்து கொள்ளும் மனோபாவம்....தனக்கோ அல்லது தன் கணவனுக்கோ தனி வாழ்க்கை கிடையாது என்று பிடிவாதமாக நினைக்கும் அப்பாவித்தனம். என்ன குடிமூழ்கிப் போய்விட்டது, தலைவிரி கோலத்துடன் கைகேயி தசரதனை வரங்கள் பெற எதிர்பார்த்ததுபோல், இருட்டில் கிடந்து மாய்கிறள்? வீட்டின் இருட்டு அவன் மனத்தில் சூன்யத்தை விரித்தது.

கீழே குழந்தைகளின் விளையாட்டுச் சத்தம் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து கொண்டு வந்தது. வீட்டை நிறைத்த தனிமை, இருட்டு, உணர்ச்சிச் செறிவின் மௌன வியாபகம்,... எல்லாமாகச் சேர்ந்து அவன் நினைவை இளமைப் பருவத்தில் கொண்டு நிறுத்தின.

கும்பகோணம் நாகேசுவரன் கோவில் சன்னதித் தெரு. எதிர்த்த வீட்டில் இரண்டு இளம் விதவைச் சகோதரிகள். மாளிகை போன்ற அந்த வீட்டில் ஏழு மணிக்கே விளக்கு அணைந்து விடும். அப்பொழுது அமிர்தத்துக்குப் பதினைந்து, பதினறு வயது இருக்கும்.

அவன் ஒரு நாள் அவர்களைக் கேட்டான்: ''ஏன் இவ்வளவு சீக்கிரம் படுத்துக்கிறீங்க?'' சின்னவள் சிரித்துக் கொண்டே சொன்னள்: ''சாப்பிடணும், தூங்கணும், எழுந்திருக்கணும்... சாப்பிடணும், தூங்கணும், எழுந்திருக்கணும்... இதைத் தவிர வேறே என்ன எங்களுக்கு விதிச்சிருக்கு? இப்படியே போச்சுன்னு எங்க காலமும் ஆயிடும். இந்த வீட்டுக்கு விளக்கு எதுக்கு?''

காலம், காலண்டர் பூர்வமாகக் கழிவதை அநுபவிக்கத்தான், மரணத்தை எதிர்நோக்கி வாழத்தான், நாம் பிறந்திருக்கிறேமா? வாழ்க்கை என்பது இறப்புக்கு நம்மைத் தயார் செய்து கொள்ளும் நீண்ட ஒத்திகையா? பிறப்பு என்பது எதேச்சை. மரணம் என்ற தவிர்க்க முடியாத உண்மையை நினைக்கும்போதுதான் இந்த எதேச்சைக்கும் ஒரு காரணம் கற்பித்து வாழலாம் என்று நமக்குத் தோன்றுகிறது. ஈடன் தோட்டத்து ஆப்பிளும், நியூட்டன் கீழே விழக் கண்ட ஆப்பிளும் ஒன்றுதான். இந்தப் பகுத்தறிவுப் பாரம்பரியத்தைச் சைத்தானுகக் காண்பது நாம் நமக்குச் செய்யும் துரோகம்.

அமிர்தத்தின் மனம் செய்தித்தாளில் ஈடுபடவில்லை. அவன் எழுந்து உள்ளே போனன்.

விளக்கைப் போடலாமா? — வேண்டாம். அவள் செய்கையைப் பொருட்படுத்தியது போலாகும்.

திலகம் திரும்பினள். அவள் அழுதிருக்க வேண்டும். முகம் வீங்கியிருந்தது.

இருவர் பார்வைகளும் சந்தித்துத் தடுமாறின.

''உங்களுக்கு ஏன் இத்தனை நேரமாச்சு வர?'' இருட்டின் ஓரத்திலிருந்து புறப்பட்டு, வேதனைச் சுமையைத் தாங்க மாட்டாமல், தள்ளாடித் தள்ளாடி வந்தன வார்த்தைகள். ஆகர்ஷணக் கயிறுகளாக அவனைச் சுற்றிப் பிணைத்துக் கொண்டு, பன்னிரண்டு வருஷ பந்தத்தை அவனுக்கு நினைவுறுத்தின.

அவன் சிறிது நேரம் பேசாமல் நின்றன். பதில் சொல்ல வேண்டுமா? அவன் பொய் சொல்ல விரும்பவில்லை. பொய் சொல்லுவது அவனுடைய அப்பொழுதிருந்த மன நிலைக்குச் செய்யும் நியாயமல்ல.

''அன்னிக்குப் பார்த்தோமில்லே, அந்தப் பொண்ணு பானு, அவள் வீட்டுக்குப் போயிருந்தேன்...''

திலகம் இந்தப் பதிலுக்குத்தான் காத்திருந்தாள் என்பது போல், திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். (தொடரும்)




## முன்கதைச் சுருக்கம்

சுந்தரசோழ சக்கரவர்த்தியின் இறுதி நெருங்கி விட்டதாகப் பலரும் நம்பினார்கள். அடுத்தாற்போல் பட்டம் யாருக்கு என்பது பற்றி நாடெங்கிலும் சர்ச்சை நடந்து வந்தது.

மூத்த புதல்வன் கரிகாலன் வீராதி வீரன். வீரபாண்டியனின் தலைகொண்ட சூரன். வடதிசைச் சேனாதிபதி. ஆனால் அவன் மனம் நிம்மதி இன்றித் தவித்தது. காரணம் அவன் வீரபாண்டியனைக் கொல்ல வாளை ஓங்கியபோது நந்தினி என்ற ஒரு பெண் குறுக்கிட்டு அவனைக் கொல்ல வேண்டாம் என்று மன்றாடினாள். கோபத்தில் ஆதித்தன் அவளை உதாசீனம் செய்தான். விளைவு அதுமுதல் கனவிலும் நனவிலும் நந்தினியின் கண்ணீர் ததும்பிய முகம் அவன் முன் தோன்றி அவனை வருத்திக்கொண்டிருந்தது.

இளைய புதல்வன் அருள்மொழி வர்மன். பொன்னியின் செல்வன் என்ற காரணப் பெயர் கொண்டவன். ஈழத்தில் மகிந்தனை முறியடித்த பின் புத்த சங்கத்தின் ஒரு பகுதியினரின் நன்மதிப்பைப் பெற்றான். அவர்கள் இலங்கை மன்னராக அவனுக்கு முடிசூட்டச் சித்தமாக இருந்தார்கள். அருள்மொழி அது ராஜத் துரோகம் என்று கருதி மறுதளித்து விட்டான். இலங்கையில் அவன் ஓர் ஊமை ஸ்திரீயைச் சந்தித்தான். அவள் தன் தந்தையின் வாலிபப் பிராயக் காதலி என்று அனுமானித்தான். அக்காதலின் விளைவாகப் பிறந்த இரட்டைக் குழந்தைகள் யார் என்பதையும் ஊகித்தான். நந்தினிக்கும் அந்த ஊமை ஸ்திரீக்குமிடையே இருந்த உருவ ஒற்றுமை ஊகத்துக்கு அடிப்படையாக இருந்தது.

நந்தினி தனாதிகாரி [பழுவேட்டரையரை மணந்து கொண்டிருந்தாள். அவரும் மற்றும் பல நிலக்கிழார்களும் சேர்ந்து சுந்தர சோழரின் பெரிய தந்தையான சிவஞான கண்டராதித்தரின் புதல்வன் மதுராந்தகனுக்கே அடுத்தபடியாகப் பட்டம் சூட்ட வேண்டும் என்று சதி செய்தனர். நந்தினி ஏற வேண்டிய மூடு பல்லக்கில் மதுராந்தகன் ஏறிக் கொண்டு பல சதிக் கூட்டங்களுக்குப் பழுவேட்டரையருடன் போய் வந்தான்.

ஆதித்த கரிகாலனின் அந்தரங்க நண்பன் வல்லவரையன் வந்தியத் தேவன். கரிகாலன் தன் தந்தைக்கு எழுதிய ஓலையை எடுத்துக்கொண்டு அவன் தஞ்சைக்குச் சென்றான். வழியிலும் பிறகு பழையாறையிலும் அவன் சுந்தர சோழரின் மகள் குந்தவையை - மக்களால் இளைய பிராட்டி என்று மரியாதையுடன் போற்றப்பட்ட எழிலரசியை - சந்தித்தான். அவ்விருவரிடையே காதல் முகிழ்த்தது.

நாட்டில் நிலவும் குழப்பமான சூழ்நிலையை முன்னிட்டு அருள்மொழி வர்மன் உடனே இலங்கையிலிருந்து திரும்பி வர வேண்டும் என்று குந்தவை வந்தியத் தேவன் மூலம் ஓலை அனுப்பினாள். பல அபாயங்களுக்கு உட்பட்டு அந்தக் காரியத்தைச் செய்து முடித்த வந்தியத் தேவன் அவளது மற்றொரு கட்டளையை ஏற்று ஆதித்த கரிகாலனைப் பார்க்க விரைந்தான். அவனுக்குத் துணையாக ஆழ்வார்க்கடியான் என்ற ஒற்றனையும் அனுப்பி வைத்தார் முதன் மந்திரி அநிருத்தர்.

ஆதித்த கரிகாலனைக் கடம்பூர் சம்புவரையர் கோட்டைக்குள் தருவித்து அவனுக்குப் பாதி ராஜ்யம், மதுராந்தகனுக்குப் பாதி ராஜ்யம் என்று சமரசம் பேசப் பழுவேட்டரையர் முதலானோர் முனைந்திருந்தனர். அதே சமயம் ஆதித்த கரிகாலனால் கொல்லப்பட்ட வீரபாண்டியனின் ஆபத்துதவிகள் கரிகாலனைப் பழி வாங்கத் தருணம் பார்த்துக் கடம்பூர் மாளிகையை நெருங்கிக் கொண்டிருந்தனர். யாரையும் தன் பார்வையால் மயக்கிவிடக் கூடிய மாய மோகினி நந்தினிக்கு இந்த ஆபத்துதவிகளுடன் தொடர்பு இருந்தது.

இதை எல்லாம் ஆதித்த கரிகாலனிடம் சொல்லி எச்சரித்து அவனைக் கடம்பூர் மாளிகைக்குப் போகாமல் தடுக்கவே பல இன்னல்களைக் கடந்து

வாயு வேக மனோ வேகமாகப் போனான் வந்தியத் தேவன். ஆனால் கரிகாலனை அவன் சந்தித்த மறுகணமே அவன் மீது ஒரு குற்றச்சாட்டு சுமத்தப் பட்டது. குற்றம் சாட்டியவன் கடம்பூர் சம்புவரையர் மகன் கந்தமாறன். சாட்டப்பட்ட குற்றம் சிநேகத் துரோகம்!

வல்லவரையன் வந்தியத் தேவன் இந்தக் குற்றச் சாட்டிலிருந்து தப்பிப்பானா? கரிகாலனைப் பேராபத்திலிருந்து காப்பானா?..... விடை காண, மேலே குறிப்பிடப்பட்டுள்ளவர்களைத் தவிர வேறு பல விநோதக் கதாபாத்திரங்களையும் உடைய பொன்னியின் செல்வனைத் தொடர்ந்து படித்துப் பார்க்கலாம்....

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# வேல் முறிந்தது!

**க**ந்தமாறன் அவனுடைய அருமை நண்பனாயிருந்த வந்தியத் தேவன்மீது கூறிய குற்றச் சாட்டைக் கேட்டு ஆதித்த கரிகாலன் இடி இடி என்று உடல் குலுங்கச் சிரித்தான்.

''கந்தமாறா! வந்தியத் தேவன் உன் முதுகில் குத்தி விட்டான் என்றா சொல்லுகிறாய்? நீ என்னத்துக்காக அவனுக்கு முதுகு காட்டினாய்?'' என்று கேட்டுவிட்டு மறுபடியும் குலுங்கக் குலுங்கச் சிரிக்கத் தொடங்கினான்.

கந்தமாறனுடைய கரிய முகம் சிவந்தது. கண்கள் கோவைப் பழம் போலாயின. உதடுகள் துடித்தன.

''ஐயா! தாங்கள் இதைச் சிரிக்கக்கூடிய விஷயமாகக் கருதுகிறீர்களா?'' என்று கேட்டான்.

''கந்தமாறா! நான் சிரிக்கக் கூடாது என்று சொல்லுகிறாயா? சிரிப்பு என்பது மனிதர்களுக்குத் தெய்வம் கொடுத்திருக்கும் ஒரு வரப்பிரசாதம். மாடு சிரிக்காது; ஆடு சிரிக்காது; குதிரை சிரிக்காது; சிங்கம் சிரிக்காது; வேடிக்கை விளையாட்டுகளில் மிக்க பிரியம் உள்ள குரங்குகள்கூடச் சிரிப்பதில்லை. மனித ஜன்மம் எடுத்தவர்கள் மட்டுந்தான் சிரிக்க முடியும். அப்படியிருக்க, நீ என்னைச் சிரிக்கக் கூடாது என்கிறாயே? நான்கூடச் சிரித்து ரொம்பக் காலமாயிற்று. நண்பா! இப்போது நான் சிரிக்கும் சத்தத்தைக் கேட்டு எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. நீ என்னைப் பார்த்துச் சிரிக்கக்கூடாது என்கிறாயே?'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''ஐயா! தாங்கள் சிரித்து மகிழ்வது பற்றி எனக்கும் சந்தோஷம்தான்! ஆனால் நான் இந்தச் சூராதி சூரனுக்கு முதுகு காட்டியதாக எண்ணிக்கொண்டு சிரிக்க வேண்டாம். நான் எதிர்பாராத சமயத்தில் பின்னால் இருந்து இவன் என்னைக் குத்தினான். தேவியின் அருளாலும் நந்தினி தேவியி பான சிகிச்சையினாலுமே நான் பிழைத்து வந்தேன். இவன் செய்த அந்தத் து செயலைக் குறித்துத் தாங்கள் விசாரித்து ந செய்யுங்கள். அல்லது நானே இவனைத் த..டிப்பதற்கு எனக்கு உடனே அதிகாரம் கொடுங்கள்!'' என்றான் கந்தமாறன்.






''நண்பனே! நானே அவசியம் விசாரித்து நியாயம் வழங்குகிறேன். செம்பியன் குலத்து மன்னர்களிடம் ஒருவன் நியாயம் கேட்டு, அவனுக்கு நியாயம் கிட்டவில்லை என்ற பேச்சு இதுவரையிலே கிடையாது. எங்கள் பரம்பரையின் ஆதி மன்னனாகிய சிபி, புறாவுக்கு நியாயம் வழங்குவதற்காகத் தன் சதையைத் துண்டு துண்டாக வெட்டிக் கொடுக்க வில்லையா? எங்கள் குலத்தைச் சேர்ந்த மனுநீதிச் சோழன் பசுவுக்கு நியாயம் வழங்குவதற்காகத் தன் குமாரனையே பலி கொடுக்க வில்லையா? நீ புறாவைவிட, பசுவைவிட மட்டமானவன் அல்ல. உனக்கு நான் நியாயம் வழங்க மறுக்க மாட்டேன். இவனை நான் விசாரிக்கும் வரையில் பொறுமையாக இரு! வல்லவரையா! உன் பிரயாணத்தைப் பற்றிய மற்ற விவரங்களைச் சொல்வதற்கு முன்னால், கந்தமாறனுடைய குற்றச்சாட்டுக்கு நீ மறுமொழி சொல்லி விடுவது நல்லது. என்ன சொல்கிறாய்? இவனை நீ பின்னாலிருந்து முதுகில் குத்தியது உண்மையா? அப்படியானால், அத்தகைய வீர லட்சணமில்லாத நீசத்தன

மான காரியத்தை ஏன் செய்தாய்? எதற்காகச் செய்தாய்?'' என்று கேட்டான்.

''இளவரசே! நான் இந்த வீராதி வீரனைக் குத்தவும் இல்லை; முதுகில் குத்தவும் இல்லை; அதுவும் பின்னால் நின்று முதுகில் குத்தவும் இல்லை. முதுகில் குத்தப்பட்டு நினைவிழந்து இரத்த வெள்ளத்தில் கிடந்தவனைத் தோளில் தூக்கிக் கொண்டு போய்ச் சேந்தன் அமுதன் வீட்டில் போட்டுக் காப்பாற்றினேன். ஆனால் அப்படி இவன் உயிரைக் காப்பாற்றியதற்காக நான் இப்போது வருத்தப்படுகிறேன். இவனை மார்பிலே குத்திக் கொல்லாமற் போனேனே என்று பச்சாத்தாபப்படுகிறேன். சிநேக தர்மத்தை முன்னிட்டு என் அரசருக்குச் செய்ய வேண்டிய கடமையைப் புறக்கணித்து விட்டேன்! ஐயா! இவன் என்னைச் சிநேகத் துரோகி என்று சொன்னான். ஆனால் இவன் சிநேகத் துரோகி மட்டுமல்ல; எஜமானத் துரோகி. இவன் முதுகில் குத்தப்பட்டது எங்கே, எந்தச் சந்தர்ப்பத்தில் என்று கேளுங்கள்! தஞ்சாவூர்க் கோட்டையின் இரகசிய சுரங்க வழியாக இவன் யாரைப் பழுவேட்டரையர் அரண்மனையில் கொண்டு போய் விட்டுத் திரும்பினான் என்று கேளுங்கள். பெரிய பழுவேட்டரையரின் பொக்கிஷ நிலவறையில் இவன் அன்றிரவு யாரைப் பார்த்தான் என்று கேளுங்கள். ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கு தினத்தில் இவனுடைய கடம்பூர் மாளிகையில் என்ன நடந்தது என்று கேளுங்கள். அன்றைக்கு அங்கே மூடு பல்லக்கிலே மறைந்து கொண்டு வந்தது யார் என்று கேளுங்கள்!''

இந்தச் சமயத்தில் கந்தமாறன், உடல் நடுங்க, நாக்குழற, ''அடே! அற்பப் பயலே! நிறுத்து உன் அபத்தப் பேச்சை! இல்லா விட்டால் இதோ இந்த வேலுக்கு இரையாவாய்!'' என்று கூறி வேலைக் கையில் எடுத்தான்.

ஆதித்த கரிகாலன் அவனுடைய படபடப்பைக் கண்டு சிறிது வியப்படைந்தான். கந்தமாறனுடைய கையிலிருந்த வேலைப் பிடுங்கித் தன் இரும்பையொத்த கரங்களினால் அதன் அடிக்காம்பை வளைத்தான். வேல் படார் என்று முறிந்தது. அதன் இரு பகுதிகளையும் ஆதித்த கரிகாலன் வீசித் தூர எறிந்துவிட்டு, ''ஜாக்கிரதை! என் சிநேகிதர்கள் என் முன்னாலேயே சண்டையிடுவதை நான் சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியாது. பார்த்திபேந்திரா! இவர்களில் யாராவது இனி வேலையோ, வாளையோ, கையில் எடுத்தால் உடனே அவனைச் சிறைப்படுத்துவது உன் பொறுப்பு!'' என்றான்.

உடனே வந்தியத்தேவன் தன்னிடமிருந்த வாளை எடுத்துப் பார்த்திபேந்திரனிடம் கொடுத்தான். பார்த்திபேந்திரன் வேண்டா வெறுப்பாக அந்த வாளைப் பெற்றுக் கொண்டான்.

''கந்தமாறா! உன்னுடைய குற்றச் சாட்டுக்கு வல்லவரையன் மறுமொழி கூறினான். அதன் உண்மையைக் குறித்து நானே சாவகாசமாக விசாரித்துத் தீர்ப்புக் கூறுகிறேன். அவன் கேட்ட கேள்விகளுக்கு நீ விடை சொல்லப் போகிறாயா?'' என்று கரிகாலன் கேட்டான்.

கந்தமாறன் தட்டுத் தடுமாறி மென்று விழுங்கிக் கொண்டு, ''ஐயா! அந்த விஷயங்களைப் பற்றி நான் யாரிடமும் சொல்லுவதில்லை என்று சத்தியம் செய்திருக்கிறேன்'' என்றான்.

பார்த்திபேந்திரன் இப்போது தலையிட்டு, ''அரசே! இவர்கள் ஒருவரையொருவர் குற்றம் சாட்டுவது ஏதோ பெண்ணைப் பற்றிய விஷயமாகக் காண்கிறது. ஆகையால் இவர்களைத் தனித் தனியாகக் கேட்டுத் தெரிந்து கொள்வது நலம்!'' என்றான்.

''ஆம், பார்த்திபா! நானும் அப்படித்தான் கருதுகிறேன். நீங்கள் மூன்று பேரும் தனித்தனியாகப் பழுவூர் இளைய ராணியைப் பார்த்து அவளுடைய மோக வலையில் விழுந்திருக்கிறீர்கள். ஆகையினால்தான் ஒருவரையொருவர் விழுங்கிவிடப் பார்க்கிறீர்கள்!'' என்று ஆதித்தகரிகாலன் கூறிவிட்டு மறுபடியும் சிரித்தான்.

பார்த்திபேந்திரனுடைய முகம் சிணுங்கியது. அவன், ''பிரபு! தாங்கள் இன்றைக்கு எந்த முக்கிய விஷயத்தையும் இலேசாகக் கருதிச் சிரிக்கத் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது. நல்லது; நானும் சொல்ல வேண்டியதைச் சொல்லி விடுகிறேன். இந்த வந்தியத் தேவன் பேரில் எனக்கும் பல சந்தேகங்கள் இருக்கின்றன. முக்கியமானதை மட்டும் இப்போது சொல்லுகிறேன். இவனைத் தீப்பிடித்த கப்பலிலிருந்து காப்பாற்றுவதற்காகவே தங்கள் அருமைச் சகோதரர் நடுக் கடலில் கடும் புயலில் குதித்தார். பிறகு பொன்னியின் செல்வரைக் காணவே இல்லை. இவன் மட்டும் அன்றிருந்த மேனிக்கு அழிவில்லாமல் கொட்டாப் புளியைப் போல் இங்கே வந்து முளைத்திருக்கிறான். தங்கள் சகோதரர் என்ன ஆனார் என்று இவனைக் கேளுங்கள். அவரைக் கடல் கொண்டிருந்தால் அதற்கு இந்தப் பாதகனே காரணமாவான்!'' என்றான்.

கரிகாலன் வந்தியத்தேவனைப் பார்த்து, ''இதற்கு என்ன மறுமொழி சொல்லுகிறாய்?'' என்று கேட்டான்.

''ஐயா! நான் இவருடைய கேள்விக்கு மறுமொழி சொல்லுவதற்கு முன்னால், இவர் ஒரு கேள்விக்கு விடை சொல்லட்டும். பொன்னியின் செல்வரை இலங்கையிலிருந்து இவர்தான் தம்முடைய கப்பலில் அழைத்துக் கொண்டு புறப்பட்டார். முதன்மந்திரி அநிருத்தரும் சேநாதிபதி பூதிவிக்கிரமகேசரியும் இலங்கையிலேயே இருக்கும்படி பொன்னியின் செல்வரைக் கேட்டுக் கொண்டார்கள். ஆயினும் தமையன் கட்டளையைப் பெரிதாய் மதித்து இளவரசர் இவருடைய கப்பலில் ஏறிக் கிளம்பினார். அவரை ஏன் இவர் பத்திரமாகத் தங்களிடம் கொண்டு வந்து சேர்க்கவில்லை? நடுக் கடலில் பொன்னியின் செல்வர் குதித்த போது இவர் ஏன் பார்த்துக் கொண்டு நின்றார்? ஏன் இளவரசரைத் தடுக்கவில்லை? ஏழையும் அநாதையுமான என்னைக் காப்பாற்றுவதற்காகப் பொன்னியின் செல்வர் தம் உயிருக்குத் துணிந்து இறங்கினாரே! வீர பல்லவ குலத்தின் தோன்றலாகிய இவரும் இவருடைய ஆட்களும் இளவரசரைப் பாதுகாப்பதற்காக ஏன் கடலில் குதிக்கவில்லை? அவரைக் கடல் கொண்டு போவதை வேடிக்கை என்று எண்ணிப் பார்த்துக் கொண்டு நின்றார்களா?....''

பார்த்திபேந்திரனுடைய முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. அவனுடைய கைகள் துடித்தன; உதடுகளும் துடித்தன; உடல் ஆடியது.

''ஐயா! இந்த மூடன் என்மீது குற்றம் சுமத்துகிறான் என்று தோன்றுகிறது. இளவரசரை நானே கொன்றுவிட்டேன் என்றுகூடச் சொல்லுவான் போலிருக்கிறது. இதை நான் ஒரு கணமும் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது!'' என்றான்.

கரிகாலன் அவனை உற்று நோக்கி, ''பார்த்திபா! நான்தான் சொன்னேனே? என் அருமைத் தோழர்களாகிய நீங்கள் மூன்று பேரும் ஒருவரையொருவர் கடித்துத் தின்றுவிடும் நிலைக்கு வந்து விட்டீர்கள். இதற்கெல்லாம் நான் உங்கள் பேரில் குற்றம் சொல்லவில்லை. அந்தப் பழுவூர் ராணியின் சக்தி அப்படிப்பட்டது என்பதை நானே உணர்ந்திருக்கிறேன். நீயும் கந்தமாறனும் குதிரை மீது ஏறிச் சற்று முன்னால் மெதுவாகப் போய்க் கொண்டிருங்கள். இவனுடைய பிரயாண விவரங்களைக் கேட்டுக் கொண்டு நான் சற்றுப் பின்னால் வருகிறேன். உங்கள் குற்றச்சாட்டுகளைப் பற்றி விசாரித்து உண்மையைக் கண்டு பிடிக்கிறேன். ஆனால் ஒன்று நிச்சயம். நீங்கள் மூன்று பேரும் சிநேகமாக இருந்தே தீரவேண்டும். ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டீர்களானால், அதைக் காட்டிலும் எனக்கு அதிருப்தி உண்டாக்குவது வேறொன்றுமிராது!'' என்றான்.

பார்த்திபேந்திரனும் கந்தமாறனும் வேறு வழியின்றித் தத்தம் குதிரை மீது ஏறி முன்னால் சென்றார்கள்.

அப்போது ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவன் அருகில் வந்து அவன் காதோடு, ''அப்பனே! நீ வெகு கெட்டிக்காரனாகி விட்டாய்! பொய்யும் சொல்லாமல் உண்மையையும் வெளியிடாமல் வெகு சாமர்த்தியமாகப் பேசித் தப்பித்துக் கொண்டாய்!'' என்றான்.

அப்போதுதான் ஆதித்த கரிகாலன் பார்வை அங்கு வந்த ஆழ்வார்க்கடியான் மீது விழுந்தது.

''ஓகோ! இவன் யார்? எப்போதோ, எங்கேயோ பார்த்த முகமாக இருக்கிறதே!'' என்று கேட்டான்.

''ஆம், அரசே! சில ஆண்டுகளுக்கு முன்பு என்னைப் பார்த்திருக்கிறீர்கள்!''

''உன் குரல்கூடக் கேட்ட குரலாகத் தானிருக்கிறது.''

''ஆம், ஐயா! மூன்று ஆண்டுகளுக்கு முன்பு மிக முக்கியமான ஒரு தருணத்தில் என் குரலைக் கேட்டீர்கள்....''

ஆதித்த கரிகாலனின் முகத்தில் திடீரென்று ஒரு கரிய நிழல் வேகமாகப் படர்வது போலிருந்தது.

''மூன்று ஆண்டுகளுக்கு முன்னால்... முக்கியமான தருணம்...அது என்ன?... வைகை நதித் தீவில் பகைவனைத் தேடி அலைந்த போது நான் கேட்ட குரலா? அப்படியும் இருக்க முடியுமா?''

''அந்தக் குரல் என் குரல்தான், அரசே! பகைவன் ஒளிந்திருந்த இடத்தைத் தங்களுக்கு மரத்தின் மறைவிலிருந்து சொன்னவன் நான்தான்!''

''ஆகா! என்ன பயங்கரமான தினம் அது? அன்றைக்கு எனக்குப் பிடித்திருந்த வெறியை நினைத்தால் இன்றுகூட உடல் நடுங்குகிறது. வைஷ்ணவனே! நீ ஏன் அன்று காட்டில் மறைந்திருந்தாய்? எதற்காக உன்னை அசரீரியாக மாற்றிக் கொண்டாய்?''

''அரசே! சற்று முன் தாங்களே சொன்னீர்களே! தங்களுக்கு அன்று பிடித்திருந்த வெறியைப் பற்றி! எதிரில் கண்டவர்களையெல்லாம் வெட்டி வீழ்த்திக் கொண்டு போனீர்கள். சில காலம் நான் உயிர் வாழ விரும்பினேன்...''

''அது மட்டுந்தானா காரணம்? 'அசரீரி வெளிவந்து எனக்கு வழி காட்டட்டும்' என்று எவ்வளவோ முறை தொண்டை வலிக்கக் கூவினேனே? அப்போதும் நீ, ஏன் வெளிவரவில்லை?''

''நான் வளர்த்த சகோதரி — இப்பொழுது பழுவூர் இளையராணி — அவளுடைய தீராத கோபத்துக்கு ஆளாக நான் விரும்பவில்லை....''

''அவளுடைய தீராத கோபத்துக்கு நான் மட்டும் ஆளாகலாம் என்று எண்ணினாயாக்கும்! அட சண்டாளா!'' என்று கூறி ஆதித்த கரிகாலன் இடையிலிருந்த கத்தியை உருவினான்.

வந்தியத்தேவன் பயந்து போனான். ஆழ்வார்க்கடியானுடைய வாழ்வு அன்றோடு முடிந்தது என்றே எண்ணினான். மிக்க தயக்கத்துடன், ''ஐயா! இந்த வைஷ்ணவன் முதன் மந்திரியிடமிருந்து வந்திருக்கிறான். இவன் கொண்டு வந்த செய்தியைக் கேட்டுக் கொண்டு பிறகு இவனைத் தண்டியுங்கள்!'' என்றான்.

''ஆகா! இவனைத் தண்டித்து என்ன பிரயோஜனம்? இனி யாரைத் தண்டித்து என்ன பயன்?'' என்று கூறிக் கரிகாலன் கத்தியைத் தன் உறையில் போட்டான்.

கரிகாலரின் கோபத்தைக் கண்டு வந்தியத்தேவன் பயந்ததுபோல் ஆழ்வார்க்கடியான் பயந்ததாகத் தெரியவில்லை. முகத்தில் விசித்திரமான புன்னகையுடன், ''அரசே! தங்கள் கோபத்தை என்பேரில் திருப்புவீர்கள் என்று எண்ணித்தான் இத்தனை நாளும் தங்களை நான் நேரில் சந்திக்காமலிருந்தேன். என் பேரில் என் சகோதரி கொண்ட கோபமும் இன்னும் தீரவில்லை. இன்று வரையில் என்னைப் பார்ப்பதற்குப் பிடிவாதமாக மறுத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் தங்கள் பேரில் அவளுடைய கோபம் தீர்ந்து விட்டதாகக் காண்கிறது. நந்தினி தேவியின் அன்பான திருமுக ஓலையைப் பார்த்து விட்டுத் தானே தாங்கள் கடம்பூர் அரண்மனைக்கு விருந்துக்குப் புறப்பட்டீர்கள்?'' என்றான்.

''ஆகா! துஷ்ட வைஷ்ணவனே! அது உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கரிகாலன் கேட்டான்.

''ஐயா! முதன் மந்திரி அநிருத்தரின் பணியாளன் நான். முதன்மந்திரிக்குத் தெரியாமல் இந்தச் சோழ ராஜ்யத்தில் எந்தச் சிறிய காரியமும் நடக்க முடியாது'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''பார்த்துக்கொண்டே இரு! ஒருநாள் அந்த அன்பில் அநிருத்தனையும் உன்னையும் சேர்த்துத் தேசப் பிரஷ்டம் செய்து விடுகிறேன்!.... இப்போது இருவரும் குதிரை மீது ஏறிக் கொள்ளுங்கள்! என் இரு பக்கத்திலும் வந்து கொண்டிருங்கள். பேசிக் கொண்டே போகலாம்'' என்றான் ஆதித்த கரிகாலன்.

## பதின்மூன்றாம் அத்தியாயம்

# மணிமேகலையின் அந்தரங்கம்

**க**டம்பூர் மாளிகையின் விருந்தினர் பகுதியில், விசேஷமாக அலங்கரிக்கப்பட்டிருந்த அந்தப்புரத்து அறையில், சப்ரமஞ்சக் கட்டிலில் நந்தினி சாய்ந்து கொண்டிருந்தாள். அவள் அன்றைக்கு மிக நன்றாக அலங்கரித்துக் கொண்டு விளங்கினாள். அவளுடைய முகம் என்றுமில்லாத எழிலுடன் அன்று திகழ்ந்தது. அவள் பகற்கனவு கண்டுகொண்டிருக்கிறாள் என்பது அவளுடைய பாதி மூடிய கண்களிலிருந்து தெரிந்தது. கண்களின் கரிய இமைகள் மூடித் திறக்கும் போதெல்லாம் விழிகளிலிருந்து மின்னலைப் போன்ற காந்த ஒளிக் கிரணங்கள் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. இதிலிருந்து அவள் பார்ப்பதற்கு அரைத் தூக்கத்தில் இருப்பதாகத் தோன்றினாலும் அவளுடைய உள்ளம் உத்வேகத்துடன் சிந்தித்துக் கொண்டிருந்தது என்பது நன்றாகப் புலனாயிற்று.

இன்னும் சிறிது கூர்ந்து கவனித்துப் பார்த்தால், அவளுடைய பாதி மூடிய கண்களின் பார்வை அந்த அறையின் ஒரு பக்கத்தில் அகிற்குண்டத்திலிருந்து கிளம்பிக்கொண்டிருந்த புகைத் திரளின் மீது சென்றிருந்தது என்பதை அறியலாம். குண்டத்திலிருந்து புகை திரளாகக் கிளம்பிச் சுழியாக வட்டமிட்டுக் கொண்டு மேலே போய்ச் சிதறிப் பரவிக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போய்க் கொண்டிருந்தது. அந்த அகிற் புகைச் சுழிகளிலே நந்தினி என்னென்ன காட்சிகளைக் கண்டாளோ, தெரியாது. திடீரென்று அவள் ஒரு பெருமூச்சு விட்டாள். அவளுடைய பவள இதழ்கள் ''ஆம், ஆம்! நான் கண்ட கனவுகள் எல்லாம் இந்தப் புகைத் திரளில் தோன்றும் சுழிகளைப் போலவே ஒன்றுமில்லாமல் போயின. இந்தப் புகைத்திரளாவது அருமையான

நறுமணத்தைத் தனக்குப் பின்னால் விட்டுவிட்டு மறைகிறது. என் கனவுகள் பின்னால் விட்டுப் போனவையெல்லாம் வேதனையும் துன்பமும் அவதூறும் அபகீர்த்தியுந்தான்!'' என்று முணுமுணுத்தன.

அச்சமயம், ''தேவி! தேவி! உள்ளே வரலாமா?'' என்று மணிமேகலையின் மெல்லிய குரல் கேட்டது.

''வா, அம்மா, வா! உன்னுடைய வீட்டில் நீ வருவதற்கு என்னைக் கேட்பானேன்?'' என்றாள் நந்தினி.

மணிமேகலை அந்தக் கதவைத் திறந்து கொண்டு மெள்ள நடந்துதான் வந்தாள். ஆனால் அவளுடைய முகத் தோற்றத்திலும் நடக்கும் நடையிலும் கையின் வீச்சிலும் உற்சாகம் ததும்பிய படியால் அவள் துள்ளிக் குதித்து ஆடிப் பாடிக் கொண்டு வருவதாகத் தோன்றியது.

நந்தினி சிறிது நிமிர்ந்து உட்கார்ந்து, கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த தந்த பீடத்தைக் காட்டி அதில் மணிமேகலையை உட்காரச் சொன்னாள்.

மணிமேகலை உட்கார்ந்து கொண்டு, ''தேவி! தங்களிடம் நான் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று என் தமையன் எனக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறான். தென் தேசத்தாரின் நாகரிகத்தைப் பற்றி ரொம்பவும் சொல்லியிருக்கிறான். கேட்காமல் கொள்ளாமல் திடீரென்று இன்னொருவர் அறைக்குள் நுழையக் கூடாது என்று தெரிவித்திருக்கிறான்!'' என்றாள்.

''தென் தேசத்தாரும் அவர்களுடைய நாகரிகமும் நாசமாய்ப் போகட்டும். உன் அண்ணன் உனக்குச் சொல்லிக் கொடுத்ததையெல்லாம் உடனே மறந்துவிடு! என்னைத் 'தேவி' என்றோ, 'மகாராணி' என்றோ ஒருபோதும் கூப்பிடாதே! 'அக்கா!' என்று அழை!''

''அக்கா! அக்கா! அடிக்கடி உங்களிடம் நான் வந்து தொந்தரவு செய்வது உங்களுக்குக் கஷ்டமாயிராதல்லவா?''

''நீ அடிக்கடி வந்து தொந்தரவு செய்வது எனக்குக் கஷ்டமாய்த்தான் இருக்கும்; என்னை விட்டுப் போகாமல் இங்கேயே இருந்து விட்டாயானால் ஒரு தொந்தரவும் இராது!'' என்று கூறி நந்தினி புன்னகை புரிந்தாள்.

அந்தப் புன்னகையில் சொக்கிப் போன மணிமேகலை சற்று நேரம் நந்தினியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, ''தங்களைப் போன்ற அழகியை நான் பார்த்ததே இல்லை. சித்திரங்களிலேகூடப் பார்த்ததில்லை'' என்று சொன்னாள்.

''பெண்ணே! நீ வேறு என் மீது மோகம் கொண்டு விடாதே! ஏற்கனவே நான் ஒரு 'மாய மோகினி' என்பதாக ஊரெல்லாம் பேச்சாயிருக்கிறது. என் பக்கத்தில் வரும் ஆண் பிள்ளைகளை மயக்கி விடுகிறேன் என்று என்னைப் பற்றி அவதூறு பேசுகிறார்கள்!....''

''அக்கா! அப்படி யாராவது அவதூறு பேசுவது என் காதில் மட்டும் விழுந்தால் அவர்களுடைய நாக்கை ஒட்ட அறுத்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன்!'' என்றாள் மணிமேகலை.

''ஊராரைக் குற்றம் சொல்லுவதில் பயனில்லை, மணிமேகலை! நான் கிழவரைக் கலியாணம் செய்து கொண்டிருக்கிறேன் அல்லவா? அதனால் அப்படித்தான் பேசுவார்கள்!''

மணிமேகலையின் முகம் சுருங்கிற்று.

''ஆம், ஆம்! அதை நினைத்தால் எனக்குக் கூட வருத்தமாகத்தானிருக்கிறது. என் தமையனும் சொல்லிச் சொல்லி வருத்தப்பட்டான். அதற்காக ஒருவரைப் பற்றிக் கண்டபடி அவதூறு பேசலாமா, என்ன?....''

''பேசினால் பேசிக் கொண்டு போகிறார்கள். மணிமேகலை! அப்பேர்ப்பட்ட சீதாதேவியைப் பற்றிக் கூடத்தான் ஊரில் அவதூறு பேசினார்கள். அதனால் சீதைக்கு என்ன நஷ்டம் வந்துவிட்டது? என் விஷயம் இருக்கட்டும்; உன்னைப் பற்றிச் சொல்லு!''

''என்னைப் பற்றிச் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது, அக்கா!''

''அடி, கள்ளி! இன்று மாலையில் வந்து உன் மனத்தில் உள்ள அந்தரங்கத்தைச் சொல்லுகிறேன் என்று நீ கூறி விட்டுப் போகவில்லையா? இப்போது என்ன சொல்லுவதற்கு இருக்கிறது என்கிறாயே?'' என்று கூறிவிட்டு நந்தினி மணிமேகலையின் அழகிய கன்னத்தை இலேசாகக் கிள்ளினாள்.

''அக்கா! எப்போதும் எனக்கு இப்படியே தங்களுடன் இருந்துவிட வேண்டும் என்று ஆசையாயிருக்கிறது. எனக்குச் சுயம்வரம் வைத்து, பெண்கள் பெண்களையே கலியாணம் செய்து கொள்ளலாம் என்று ஏற்படுத்தினால் நான் தங்களுக்குத்தான் மாலையிடுவேன்!'' என்றாள் மணிமேகலை.

''என்னை நீ பார்த்து முழுமையாக ஒரு நாள்கூட ஆகவில்லை! அதற்குள் இப்படி மாய்மால வார்த்தைகள் பேசுகிறாயே? அதைப் பற்றி எனக்குச் சந்தோஷம்தான். எனக்குப் பிரியமான தோழி உன்னைப் போல் ஒருத்தி இல்லையே என்று எவ்வளவோ தாபப்பட்டுக் கொண்டிருந்தேன். சோழ நாட்டின் சிற்றரசர் வீட்டுப் பெண்கள் எல்

லாரும் அந்தப் பழையாறைப் பிசாசைத் தான் தேடிக் கொண்டு போவார்கள். நீ ஒருத்தியாவது எனக்கு மிச்சமிருக்கிறாயே?—ஆனால் நீ சற்றுமுன் கூறியது நடவாத காரியம். பெண்ணுக்குப் பெண் மாலையிடுவது என்பது உலகில் என்றும் நடந்ததில்லை. யாராவது ஓர் ஆண் பிள்ளையைத்தான் நீ மணந்து கொண்டு தீர வேண்டும்....''

'' கன்னிப் பெண்ணாகவே இருந்து விட்டால் என்ன, அக்கா ?''

''முடியாது, கண்ணே! முடியாது! கன்னிப் பெண்ணாயிருக்க இந்த உலகம் உன்னை விடவே விடாது. உன் அம்மாவும் அப்பாவும் விடமாட்டார்கள். உன் தமையனும் விடமாட்டான். யாராவது ஓர் ஆண் பிள்ளையின் கழுத்தில் உன்னைக் கட்டி விட்டால்தான் அவர்களது மனம் நிம்மதி அடையும். அப்படி நீ கலியாணம் செய்து கொள்வது என்று ஏற்பட்டால், யாரை மணந்து கொள்ளப் பிரியப்படுகிறாய், சொல்லு!''

''பெயரைக் குறிப்பிட்டுக் கேளுங்கள் அக்கா! சொல்கிறேன்!''

''சரி, சரி! அப்படியே கேட்கிறேன்! சிவபக்தியில் சிறந்த மதுராந்தகத் தேவரை மணந்துகொள்ள விரும்புகிறாயா? அல்லது வீர தீர பராக்கிரமங்கள் நிறைந்த ஆதித்த கரிகாலருக்கு மாலையிடப் பிரியப்படுகிறாயா?''

திடீரென்று மணிமேகலை எதையோ நினைத்துக் கொண்டவள் போல் கலகலவென்று வாய்விட்டுச் சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறாய், மணிமேகலை? நான் பரிகாசம் செய்கிறேன் என்று எண்ணிக் கொண்டாயா ? இந்த விஷயத்தை முடிவு செய்வதற்காகவே என்னை உன் தமையன் இங்கே முக்கியமாக வரச் சொன்னான். இன்னும் சற்று நேரத்தில் கரிகாலர் இங்கே வந்துவிடக் கூடும். உன் தமையனும் வந்து விடுவான். உன் அந்தரங்கத்தை அறிந்து கொள்ளுவதாக அவனுக்கு நான் வாக்குக் கொடுத்திருக்கிறேன்'' என்றாள் நந்தினி.

'' என் அந்தரங்கம் இன்னதென்று எனக்கே தெரியவில்லையே அக்கா! நான் என்ன செய்யட்டும்?''

'' எதற்காகச் சிரித்தாய், அதையாவது சொல் !'' என்று கேட்டாள் நந்தினி.

''மதுராந்தகர் பெயரைச் சொன்னதும் ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. நாலு மாதங்களுக்கு முன்பு அவர் இந்த வீட்டுக்கு ஒரு தடவை வந்திருந்தார். தாங்கள் வழக்கமாக வரும் மூடு பல்லக்கில் ஏறிக் கொண்டு ஒருவரும் பார்க்காமல் திரை போட்டுக் கொண்டு வந்தார். அந்தப்புரத்தில் எங்களுக்கு அந்த இரகசியம் தெரியாது. தாங்கள்தான் வந்திருக்கிறீர்கள் என்று எண்ணிக் கொண்டிருந்தோம். 'பழுவூர் ராணி ஏன் அந்தப்புரத்துக்கு வரவில்லை ?' என்று ஒருவரை யொருவர் கேட்டுக் கொண்டிருந்தோம்! அக்கா! பெண்களைப் பெண்கள் கலியாணம் செய்து கொள்ள முடியாது என்று சற்றுமுன் சொன்னீர்கள் அல்லவா? மதுராந்தகரை நான் மணந்து கொள்வது ஒரு பெண்ணை மணம் புரிந்து கொள்ளுவது போலத்தான் !.....''

நந்தினி புன்னகை புரிந்து, ''ஆம், ஆம்! மதுராந்தகரை நீ விரும்பமாட்டாய் என்றுதான் நானும் நினைத்தேன். உன் அண்ணனிடமும் சொன்னேன். மதுராந்தகத் தேவர் முன்னமே என் மைத்துனர் மகளை மணந்து கொண்டிருக்கிறார். அவள் ரொம்ப அகம்பாவக்காரி. அவளுடன் உன்னால் ஒரு நாள் கூட வாழ்க்கை நடத்த முடியாது. அப்படியானால், இளவரசர் கரிகாலரிடம் நீ மனத்தைச் செலுத்தி விட்டாய் என்று சொல்லு!'' என்றாள்.

'' அப்படியும் சொல்ல மாட்டேன், அக்கா ! அவரை நான் பார்த்ததே இல்லை. எப்படி என் மனம் அவரிடம் சென்றிருக்க முடியும்?''

''அடியே! இராஜகுலத்துப் பெண்கள் பார்த்து விட்டுத்தான் மனத்தைச் செலுத்துவது என்பது உண்டா? கதைகளிலும் காவியங்களிலும், சித்திரங்களைப் பார்த்து விட்டும் கீர்த்தியைக் கேட்டுவிட்டும் காதல் கொண்ட பெண்களைப் பற்றி நீ அறிந்ததில்லையா?''

''ஆம், ஆம்! அறிந்திருக்கிறேன். ஆதித்த கரிகாலர் வீராதி வீரர் என்றும் உலகமெல்லாம் அவர் புகழ் பரவியிருக்கிறதென்றும் அறிந்திருக்கிறேன். அக்கா! வீரபாண்டியனுடைய தலையை ஆதித்த கரிகாலர் ஒரே வெட்டில் வெட்டி விட்டாராமே ? அது உண்மையா ?''

நந்தினியின் முகம் அச்சமயம் எவ்வளவு பயங்கரமாக மாறியது என்பதை மணிமேகலை கவனிக்கவில்லை.

நந்தினி சில விநாடி நேரம் வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுத் திரும்பினாள். அதற்குள் அவள் முகம் பழையபடி பார்ப்போரை மயக்கும் மோகன வசீகரத்துடன் விளங்கியது.

'' மணிமேகலை ! ஒருவனுடைய தலையை ஒரே வெட்டில் வெட்டி விடுவது பெரிய வீரம் என்று கருதுகிறாயா? அது பயங்கர அசுரத்தனம் அல்லவா ?'' என்றாள்.

# கீதைக் கதைகள்



'நான் உன்னிற் கலந்தேன். கடமையை இயற்றி, பயனை ஈசுவரார்ப்பணமாக்கினேன். மௌனமும் என் யோகமே.....'

## 1. பணி

அன்று மகாபாரதப் போர் முடிந்தது. வெற்றி அறத்தின் பக்கலில் பலித்தது. பார்த்தனின் காண்டீபம் எழுப்பிய நாணொலி இன்னமும் மடியாது நாலு பக்கமும் எதிரொலிப்பதாகப் பிரமை நிலவியது. பார்த்தசாரதியின் தேரிலே பூட்டப்பட்ட புரவிகள் கூட ஒருவித வெற்றிப் பெருமிதத்தில் மிதந்தன.

வாகை வெறியில் காண்டீபம் தன் வகை மறந்தது. பற்றுக்களை அறுத்த ஞானியாகப் பார்த்தன் கண்ணன் மீது பக்தி செலுத்துதல் அதற்குப் பிடிக்கவில்லை. 'விஜயா! வில் என்றால் நான்; நான் என்றால் நீ. எனவே, வெற்றி நினதே!' எனக் காண்டீபம் இரகசியமாகச் செவி கடித்துக் கூறிற்று.

காண்டீபத்தின் கூற்று கண்ணனின் திருச் செவிகளிலே விழத் தவறவில்லை. அவன் முகத்தில் அனந்தகோடி அர்த்தங்களைச் சொல்லாமலே சொல்லும் முறுவல்.

தேர்ச் சக்கரங்கள் பரம இரகசியமான குரலிற் பேசிக் கொண்டன. உரையாடலின் சாரம்: 'தக்க சமயத்தில் நாங்கள் மட்டும் நிலத்தில் புதைந்திருக்கா விட்டால் பார்த்தன் கர்ணனின் நாகாஸ்திரத்துக்குப் பலியாகி இருப்பான். யுத்தத்தின் முடிவு வேறு விதமாக அமைந்திருக்கும்....'

கண்ணனின் திருச் செவிகள் இக்கூற்றைக் கிரகித்தன. அவன் முகத்தில் அதே முறுவல்.

கிழவியொருத்தியின் ஏக்கப் பெருமூச்சின் கேவல் கண்ணனின் செவிகளை அடைகின்றது.

'எல்லாம் அக்கள்ளனின் சூழ்ச்சிகள்! போரிலே என் இஷ்டன் வென்றான். அந்த வெற்றிக்கு என் சிரேஷ்டனைப் பலி கொடுத்தேன்... 'மாமி, மாமி!' என மயக்கி அந்த மாயவன் தன் காரியம் யாவும் சாதித்துவிட்டான். இவன் பொருட்டுப் பெற்ற வரம், கலவிக் கனியமுதின் முதலாவது அறுவடையாக ஈன்றெடுத்த மகனின் எமனாகியது.....'

புதிதாகச் சுரந்துள்ள தாய்ப் பாசத்தின் ஏக்கமே இவ்வோலம் என்பதைக் கண்ணன் அறிவான். அவன் முகத்தில் அதே முறுவல்.

தேரிலிருந்து இறங்கிய கண்ணன் எதையோ நினைவு படுத்திக் கொண்டவனாக, 'அச்சாணியே! ஏன் நீ மட்டும் மௌனமாக இருக்கிறாய்?' எனக் கேட்டான்.

'கீதோபதேசம் என் செவிகளிலும் விழுந்தது. நான் உன்னிற் கலந்தேன். கடமையை இயற்றிப் பயனை ஈசுவரார்ப்பணமாக்கினேன். அந்த இன்பத்தில் மௌனமானேன். மௌனமும் என் யோகமே என்பதைப் பரந்தாமன் அறியானோ?' எனக் கூறிய அச்சாணி மௌனத்தைத் தொடர்ந்து இயற்றியது.

கண்ணனின் முகத்தில் ஒளிர்ந்த முறுவல் சிரிப்பாகக் கனிந்து வெடித்தது.

— எஸ். பொன்னுத்துரை

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை, அக்கா! பகைவனின் தலையை வெட்டுவது வீரம் இல்லையா? அது எப்படி அசுரத்தனமாகும்?''

''இந்தமாதிரி யோசனை செய்து பார்! உனக்கு ரொம்ப வேண்டியவன் ஒருவனை அவனுடைய பகைவன் தலையை வெட்ட வருகிறான் என்று வைத்துக்கொள். உன் தமையனை எண்ணிக் கொள். அல்லது நீ மணம் செய்து கொள்ள உத்தேசித்திருக்கும் காதலன் ஒருவன் இருப்பதாக நினைத்துக் கொள். அவன் காயம் பட்டுப் படுத்த படுக்கையாகக் கிடக்கும் போது, இன்னொருவன் — அவனுடைய பகைவன், — கத்தியை ஓங்கிக் கொண்டு தலையை வெட்ட வருகிறான் என்று எண்ணிக் கொள். அப்படி வெட்ட வருகிறவனுடைய வீரத்தை நீ மெச்சிப் பாராட்டுவாயா?'' என்று கேட்டாள் பழுவூர் ராணி.

மணிமேகலை சற்று யோசித்துவிட்டு, ''அக்கா! மிக விசித்திரமான கேள்வி நீங்கள் கேட்கிறீர்கள். ஆயினும் எனக்குத் தோன்றும் மறுமொழியை நான் சொல்லுகிறேன். அத்தகைய நிலைமை எனக்கு ஏற்பட்டால், நான் சும்மா பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். கொல்ல வருகிறவனுடைய கையிலிருந்து கத்தியைப் பிடுங்கி அவனை நான் குத்திக் கொன்று விடுவேன்!'' என்றாள்.

நந்தினி மணிமேகலையை ஆர்வத்துடன் கட்டித் தழுவிக் கொண்டாள். ''என் கண்ணே! நல்ல மறுமொழி சொன்னாய்! இவ்வளவு புத்திசாலியாகிய உனக்கு நல்ல கணவன் வாய்க்க வேண்டுமே என்று எனக்குக் கவலையாயிருக்கிறது. ஆதித்த கரிகாலர் கூட உனக்குத் தக்க மணவாளர் ஆவாரா என்பது சந்தேகந்தான்'' என்றாள் நந்தினி.

''நானும் அப்படித்தான் எண்ணுகிறேன். கரிகாலருடைய குணாதிசயங்களைப் பற்றிக் கேட்ட பிறகு அவரை நினைத்தால் எனக்குச் சற்றுப் பயமாகவே இருக்கிறது. என்னுடைய அந்தரங்கத்தை, என் மனத்திலுள்ளதை, உள்ளபடி சொல்லட்டுமா, அக்கா?'' என்று கேட்டாள் மணிமேகலை.

(தொடரும்)



[கண்ணனிடம் கோபியர் கொண்டிருந்த பிரேமையை இன்னும் வாழ்ந்து காட்டுபவர்கள், 'தாதா' என அழைக்கப்படும் ஸ்ரீ திலீப் குமார் ராயும், 'திதி' என அழைக்கப்படும் அவரது சிஷ்யை ஸ்ரீமதி இந்திரா தேவியும். வங்காளத்தில் ஒரு பெருங் குடியைச் சேர்ந்த ஸ்ரீ திலீப் குமார் ராய், இசைக் கலைஞர் என்ற முறையில் இந்தியாவெங்கும் பெயரெடுத்தார். இலக்கிய கர்த்தா என்ற முறையில் இந்தியாவுக்கு அப்பாலும் பெயரெடுத்தார். ஆனால் நாளாக ஆக பெயரும் புகழும் தொடாத பகவத் பிரேமைக்கே அவர் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். பாண்டிச்சேரியில் அவர் ஆன்ம சாதனைகளில் ஈடுபடலானார். பஞ்சாபைச் சேர்ந்த ஸ்ரீமதி இந்திரா தேவிக்கும் அருள் தாகம் எடுத்தது. செல்வச் சீமாட்டியான ஸ்ரீமதி இந்திராதேவி பொருட் செல்வத்தைப் பொருட்படுத்தாமல் அருள் வாழ்வு வேண்டி ஸ்ரீ திலீப் குமாரை அடைந்து அவரது சிஷ்யையானார். ஆன்ம சாதனையிலும், கவித்துவத்திலும் நாள்தோறும் பக்குவம் எய்தினார். மீரா பாயைத் தமது பாவ சமாதி நிலையில் கண்டு, இதுகாறும் வெளியாகாத அவளது வாழ்க்கைச் சம்பவங்களையும், பஜனைப் பாடல்களையும், வெளியிட்டு வருகிறார் ஸ்ரீமதி இந்திரா தேவி.

சமீபத்தில் இப்படிப்பட்ட பாவ சமாதி நிலையில் இந்திரா தேவி வெளியிட்ட ஓர் அற்புத சம்பவத்தை—அந்தச் சம்பவத்துள் பொதிந்துள்ள அற்புத உண்மையை—நம் வாசகர்களுக்கும் ஆக்குகிறோம். மீராவும் அடியார்களும் பக்திக் காதலில் பஜனை செய்வது, வரட்டுச் சித்தாந்த

# மீண்டும் பாகவத காலத்தில்..

வாதியான சாது ஒருவருக்குக் கேலியாக இருக்கிறது. ''மீரா தேவி, பகவானுடன் கூடிக் களித்ததாக ஒரு சமயத்தில் பாடுகிறாய். பிறகு, அவனை மறுபடி இழந்துவிட்டதாக விரகதாபத்திலும் கானம் செய்கிறாயே! இது எப்படிச் சாத்தியம்? எங்கள் ஞான மார்க்கப்படி ஒருமுறை பிரம்மசாக்ஷாத்காரம் கிட்டிவிட்டால் அப்புறம் அதிலிருந்து விலகுவது என்ற பேச்சே கிடையாது'' என்று சாது மீராவைக் 'கொக்கி' போட்டு நெரிக்கப் பார்க்கிறார். மீராவோ சற்றும் கலங்கவில்லை. சத்திய அநுபவம் தந்த அழுத்தத்தின் தெளிவுடன் அவள் அழகாக விடை சொல்கிறாள்: ''கங்கை கடலில் போய் விழுந்து கடலாகவே ஆகிவிடுவது வாஸ்தவம்தான். ஆனால் அதே சமயத்தில் அனவரதமும் கடலைத் தேடிப் புவியில் ஓடிக் கொண்டும் இருக்கிறதல்லவா? கூடல் - விரகம் இரண்டும் இப்படியே!'' — என்கிறாள் மீரா. எவ்வளவு உன்னதக் கருத்து! கங்கை தன்மட்டில் கடலில் கலந்துவிட்டாலும், உலகுக்கு உபகாரம் புரிவதற்காக மண்ணிலும் ஓடிக் கொண்டுதானே இருக்கிறது? பக்தர்களும் இப்படியே பகவானுடன் கலந்துவிட்டாலும், அதைப் பூரணக் கலப்பாக்கி விடாமல், உலகோருக்கு வழி காட்டுவதற்காக, பரமனின் சேர்க்கையையும் சிறிது தியாகம் செய்து விரகதாபத்தில் தோய்ந்து அடியாரையும் அதனில் ஈடுபடுத்துகின்றனர்.

தாதா—திதி ஆகிய இவ்விரு பக்த சிகாமணிகளும் புனவில் ஹரிகிருஷ்ண மந்திரத்தில் வாழ்ந்துவருகிறார்கள். இவர்களைக் குறித்த இக் கட்டுரையை எழுதியுள்ள இவர்களது உழுவலன்பர் ஸ்ரீ குருதயாள் மல்லிக் அவர்கள் சமீபத்தில் கண்ணனின் கமல சரணங்களை அடைந்துவிட்டார்.

— ஆசிரியர்]



ஹரிகிருஷ்ண மந்திரத்தில் நான் பிரவேசிக்கும்போதே, 'ஹரே கிருஷ்ணா, ஹரே கிருஷ்ணா' என்ற பரவசமான நாமசங்கீர்த்தனத்தின் அமுதச் சுவை என் செவிகளில் பிரவேசிக்கலாயிற்று. ஹரிகிருஷ்ண மந்திரம் எனப்படும் இவ்வாலயத்தில் இந்திரா தேவி, தாதா திலீப் குமார் ஆகிய இரு ஆன்ம சமர்ப்பணமான வியக்திகள் இரவு தோறும் தெய்விக இசை பாடுகின்றனர். அதைக் கேட்டு அடியார்கள் அதன் வழியே ஒரு தெய்விகச் செய்தியும் பெற்று மயிர்க்கூச் செறிகின்றனர்.

மற்ற சாதகர்களுடன் நானும் ஆண்டவனின் நாம மாதுரியத்தைப் பருகும்போது புதிய விழிப்படைந்தேன். நாமசங்கீர்த்தனத்தின் உட்பொருளைப் புத்தி பூர்வமாகவும், இதய பூர்வமாகவும் உணரலானேன். 'ஹரே', 'கிருஷ்ணா' என்ற இரு நாமங்களும் இறைவனைத் தேடும் சாதகனின் சாசுவதமான தேட்டத்தின் இரு மூர்த்திகளாகவே தோன்றின. ஒவ்வோர் ஆன்மாவையும் தெய்விகக் கருணைப் பிரவாகத்தை நாடுபவர்களாகச் செய்யும் தேட்டம் அல்லவா இது? தெய்விகத்தைத் தேடும் நாம் ஒவ்வொருவருமே உள்ளூறத் தெய்விகமானவர்கள். ஆயினும் அறியாமை இருளில் கட்டுண்டு கிடக்கிறோம். நம் வாஸ்தவ நிலையை உணராதிருக்கிறோம். இதனால்தான், காலகாலமாக ஒரு புதிர் நிகழ்ந்து வருகிறது. கிருஷ்ணனேயாகிய நாம் ஒவ்வொருவரும், அந்தக் கிருஷ்ணனைத் தேடுபவர்களாகவும் இருந்து வருகிறோம். இந்த விந்தைத் தேட்டம் காலம் முடியும் அளவும் தொடரும். சாதகர்களாகிய நமக்கு, தாதா திலீப்பும் நிதி இந்திராவும் தமது அற்புத ஆவேச பஜனையின் மூலம் அறிவிக்கும் தெய்விகச் செய்தி இதுவே.

நிதி மிகவும் பாக்கியசாலி. அவர் பாடுகையில் அவ்வப்போது சர்வேசுவர தரிசனத்தையே பெறுகிறார். அவருள் அடிக்கடி மீராவே பிரவேசித்து, ஆட்கொள்ளுகிறார். அச்சமயங்களில் அவருக்குக் கண்ணனின் தரிசனம் கிட்டுகிறது. அவர் பரவச நிலை அடையும்போது புதிய பஜனைப் பாடல்களை வெளியிடுகிறார். அந்தப் பஜனைப் பாடல்கள் மந்திர சக்தி வாய்ந்தவையாகவும், இதுகாறும் தெரியாத உண்மைகளை வெளியிடுவனவாகவும் உள்ளன. அவற்றை தாதா பாடுகையில் அவரது பக்தியே உருண்டு திரண்டு ஓர் உருவாகி ஜீவசக்தி ததும்ப நம் முன் நிற்பது போலிருக்கிறது.

தாதா உணர்ச்சிப் பரவசமாக இப்பாக்களை கானம் செய்கையில், 'பகவான் எங்கோ ஆகாயத்தில் இல்லை, நம்மிடையிலேயே இருக்கிறான்' என உணர்கிறோம். அவனது உண்மைத் தத்துவத்தைத் தியானிக்க இதுவே நம்மைத் தூண்டுகிறது. மாயைத் திரையை விலக்க, மாய வலையை அறுக்க இந்தத் தியானம் ஒன்றுதான் உதவும். உற்சாகத்துடன் ராம நாமம் கோஷிக்கப்படுகையில் அப்போதைக்குப் பற்றுகளிலிருந்து விடுபட்டு பரமனின் பதத்தில் நம் ஆன்மாவை அர்ப்பணிக்கிறோம். அவனது மகத்தான ஆன்மா நமது சின்ன ஆன்மாவுடன் ஒன்றாக இருக்கும் நிலையைக் கண நேரம் உணர இது உதவுகிறது.

ஆண்டவனிடம் நாம் எதையுமே ஒளிக்காவிட்டால்தான் இந்தக் காட்சியைக் காண— அவனது செய்தியைக் கேட்க — இயலும். இதைத்தான், ''அவனுக்கு உங்கள் முதுகைக் காட்டிக் கொண்டு உட்காராதீர்கள்; உங்கள் கண் முன்னரே அவனை எப்போதும் வைத்துக் கொள்ளுங்கள்'' என்று நிதி கூறுவார். அவனை நேர்முகமாக வைத்துக் கொண்டு அன்போடு பாருங்கள் என்பதே இதன் தாத்பரியம்.

நிதி விடுக்கும் மற்றொரு நல்லுரை, ''உலக விவகாரங்களை நீங்கள் கேட்டுத்தான் ஆக வேண்டியிருக்கிறது எனில் கேளுங்கள். யார் வந்தார், யார் போனார், யார் இதைச் சொன்னார், யார் அதைச் சொன்னார் என்பதையெல்லாம் கேட்டு வையுங்கள். ஆனால் இதற்கெல்லாம் ஒரு காதையே கொடுங்கள். இன்னொரு காதை எப்போதும் அவனது திருவடிகளின் மிருதுவான ஓசைக்கு, அவனது திவ்வியக் குழலின் அழைப்புக்கு அர்ப்பணியுங்கள். குழலின் அழைப்பு உங்கள் உடலின் ஒவ்வோர் இழையிலும் ஊறி எதிரொலிக்குமாறு செய்து கொள்ளுங்கள். இவ்வாறே, இவ்வுலகை ஒரு கண்ணால் பாருங்கள். ஆனால் மற்ற கண்ணை அனவரதமும் நம்மைச் சிருஷ்டித்தவனின் காட்சிக்கென்றே திறந்து வைத்திருங்கள்.''

நிதியைப் பொருத்தமட்டில் இவை வெற்று வார்த்தைகள் அல்ல. இச் சொற்களின் பொருளை அவர் வாழ்ந்து காட்டுகிறார். அவர் ஒரே சமயத்தில் இங்கும் இருக்கிறார்; அங்கே பிருந்தாவனத்தின் இதய மத்தியிலும் இருக்கிறார். இவ்வுலகிலிருந்து கொண்டே இதற்கு அப்பாற்பட்டு வாழ்கிறார் — சேற்றில் பிறந்தாலும் ஆகாயத்துடன் உறவாடிக்கொண்டு நிமிர்ந்து மலரும் தாமரை போல்.

தாதாஜியைப் பற்றி என்ன சொல்ல? நிதி வெளியிடும் பஜனைப் பாக்களை அவர் எடுத்தெழுதுகிறார். அவற்றை ஆய்ந்து பார்க்கிறார். வங்காளி மொழியிலும், ஆங்கிலத்திலும் நிறைய எழுதுகிறார். பக்தர்களைச் சந்திக்கிறார். ஆண்டவனைச் சந்திக்கும் உச்ச நிலைக்கு அவர்களை உசுப்பி எழுப்பி, அவர்களது ஆன்மிக அபிலாஷைகளை உந்துகிறார். அகம்பாவத்தை அகற்றி, மனத்தை மாயா பாசத்திலிருந்து விடுவிக்கும் சாதனையாக மணிக் கணக்கில் பாடுகிறார்.

'எந்தப் பலனிலும் கருத்து வையாமல், எவ்விதப் பற்றும் வையாமல், உலகில் வாழும் போதே என்னைச் சரணமடைவாயாக' என்று கண்ணன் கூறிய ஆணைக்கிணங்க பக்தி நெறியைப் பரப்புவதே ஹரிகிருஷ்ண மந்திரத்தின் காரியக் கிரமமாகும்.

இவ்வாலய ஸ்தாபகியான நிதியின் பெருமையைக் காட்ட ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறேன்:

இது நடந்தது 1962 ஜனவரி 31ந் தேதி. இரவு ஏழரை மணி இருக்கும். தாதா

குழலை அடியோடு மறந்து, மீரா பஜன் ஒன்றைப் பாடிக் கொண்டிருந்தார்.

**கோவிந்த் கோவிந்த் காயே மீரா,**
**கோவிந்த் கோவிந்த் காயே**
**நிஸதின ராதி கோவிந்த் கே ரங்,**
**கோவிந்த் கோவிந்த் த்யாயே**

**'கோவிந்த் கோவிந்த்' - கானம் செய்வாள் மீரா**
**'கோவிந்த் கோவிந்த்' எனப் பாடுவாள்**
**இரவிலும் பகலிலும் கோவிந்தனை எண்ணி எண்ணி**
**'கோவிந்த் கோவிந்த்' த்யானம் செய்வாள்**

தாதாஜி பக்தி நிரம்பி வழியத் தம்மை மறந்து பாடிக் கொண்டிருந்தார் — பரமனைத் தேடிக் கொண்டிருந்தார். அவரது கண்ணங்களில் கண்ணீர் வழிந்தது. நிதியின் கண்களிலிருந்தும் ஒரே பொழிவாக நீர் பெருகலாயிற்று. அவர் என்ன கேட்டாரோ, என்ன பார்த்தாரோ — யார் சொல்ல முடியும்? அவனது குழல் அவரை அழைத்துவிட்டது போலும்! கண்ணீரில் மிதக்கும் சிவந்த கண்களைத் திறந்தார் நிதி.

அவர் கண்ட திவ்வியக் காட்சி பற்றி தாதா வினவினார்.

அவரோ சடேரென எழுந்தார். ''நான் ஆற்றுக்குப் போகிறேன்'' என்று மட்டும் கூறிவிட்டு, பரவச நிலையில் ஓடலானார்.

தாதாவும் நாங்களும் அவரைத் தொடர்ந்தோம்.

அரை பர்லாங்கு கடந்ததும் ஒரு கால்வாய் அருகே நிதி நின்றார்.

அவரை ஆலயத்துக்குத் திரும்பி வருமாறு பதமாகச் சொன்னார் தாதா. ஆனால் அவரோ மறுதலித்துத் தலையை ஆட்டினார். ''அவன் வரும்போது நான் எப்படித் திரும்ப முடியும்? இந்த இடத்தில்தான் அவன் என்னைக் காத்திருக்கச் சொன்னான். அவன் எந்த விநாடியும் வரக்கூடும். எனவே நான் இங்குதான் இருந்தாக வேண்டும்'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார்.

சிறிது மௌனத்துக்குப் பிறகு நிதி தொடர்ந்தார்: ''நான் மட்டுமல்ல; கோபிகைகளான நீங்கள் அனைவரும் கூடக் காத்திருக்க வேண்டும்.''

கண்ணனின் வாக்குறுதியைப் பற்றி அவர் மேலும் மேலும் சொல்லிக் கொண்டே போனார்.

கடைசியில் தாதா குறுக்கிட்டு, அவரை மந்திரத்துக்குத் திரும்புமாறு மிக இதமாகக் கேட்டுக் கொண்டார்.

நிதியோ தீர்மானமாகத் தலையை ஆட்டினார். ''முடியாது. அவன் வரவிருக்கும்போது அதெப்படி முடியும்?'' என்றார்.

''சரி, சரி, நானே அவனிடம் உன்னை அழைத்துப் போகிறேன்'' என்று தாதா கூறி அவரது தோளைப் பற்றித் திரும்ப அழைத்து வரலானார்.

நிதியும் அவரைக் குழந்தைபோலப் பார்த்துவிட்டு அவரது வார்த்தையை அப்படியே நம்பித் திரும்பி நடந்தார்.

ஆலயத்துக்கு வந்த பின், ''குழந்தாய், என்ன நடந்தது?'' என்று கேட்டார் தாதா.

''நாங்கள் அவனுக்காக ஆர்வ விசாரத்துடன் காத்திருந்தோம்'' என்று தொடங்கினார் நிதி. (''நாங்கள் என்று அவர் சொன்னது மீராபாயையும் அவருடைய சாது சங்கத்தையும் குறிக்கும்.)

நிதி தொடருவார்: ''இருட்டி விட்டது. அருகே ஜபம் செய்து கொண்டிருந்த சாது ஒருவரிடம் போய், 'பாபா, கோபாலன் ஏன் வரவில்லை? எப்போது வருவான்? அவனை நீங்கள் பார்த்தீர்களா?' என்று கேட்டோம். 'எனக்கு அவனிடமிருந்து ஒரு சங்கதியும் கிடையாது. அவனை நான் பார்க்கவும் இல்லை' என்று கூறிவிட்டார் சாது. மீராவோ விடாப்பிடியாக, 'இல்லை பாபா, அவன் நிச்சயமாக இங்கு வருவதாகச் சொன்னானே! நடுநிசி வரை எங்களைக் காத்திருக்கச் சொன்னானே! அவனை எப்படி நீங்கள் காணத் தவறினீர்கள்? ஒருவேளை நீங்கள் அதைவிட அதிமுக்கிய காரியத்தில் ஈடுபட்டிருந்ததால் அவனது காலடியைக் கேட்கத் தவறிவிட்டீர்களோ என்னவோ? அவன் மிக மிக மிருதுவாக அடி வைப்பான். நுவ்வொரு ரோமக் காலாலும் உன்னிப்பாகக் கேட்டால்தான் அவனது அடியோசை கேட்கும்!''

மீரா சொன்னது எவ்வளவு உண்மை! சாது தமது தியானச் சடங்கையே முக்கியமாக நினைத்துக் கண்ணனைத் தவறவிட்டார் போலும்! நம்முடைய அற்ப விவகாரங்களின் இரைச்சலில், வெற்றுச் சடங்குகளின் அமளியில் அவனது அடியோசையை இழக்கிறோம். அவனுக்காக ஆசைப்படுகிறோம். ஆனால் அவனது கழலோசையை — குழலிசையை — கேட்க நம்மைத் தயார் செய்து கொள்வதில்லை. அவனது குழலின் சுருதிக்கு நாம் இசையாததால்தான், எங்கும் எப்போதும் உள்ள அவனை நாம் தவற விட்டுக் கொண்டே யிருக்கிறோம்.

ஆயினும் விரகதாபத்துடன் அவனுக்காக ஏங்கி, ஏங்கி, கதறிக் கதறி, காத்துக் காத்துக் கிடப்பவர்கள் அவனை நிச்சயம் காண முடியும். தங்களுள் அவன் நினைவை விளிம்பு வழிய நிரப்பிக் கொண்டு விட்டால் நிச்சயம் தரிசனம் தருவான்.

பிரேமைப் பித்தின் அரசியான மீராவாக, அனைத்தையும் அவனுக்காக உதறி எறிந்த மீராவாக நாம் ஆகாதது பரிதாபம்! ஆம், நம் வாழ்வு பரிதாபமானதுதான். அவனிடம் பிரேம போதை கொள்பவர்களே அதிபாக்கியசாலிகள். அவர்கள் கதறும்போது சாட்சாத் அவனே பதில் குரல் கொடுக்கிறான். வாக்குறுதி தருகிறான். 'பிரேமையெனும் ஆற்றங்கரையில், உணர்வுகள் உறங்கும் நடுநிசி நிலை வரும்வரை காத்திருங்கள். நான் வந்தே தீருவேன்' என்று பிரதிக்ஞை செய்கிறான்.

**ஆதிராத் ஹம் தர்சன் தேங்கே**
**ப்ரேம் நதிகே தீரா.**

**அன்பு நதிக்கரையில் அர்த்தநிசிப்பொழுதில்**
**அமுத தரிசனம் அளிப்பேன்.**

[ஸ்ரீ திலீப் குமார் ராயின் எழுபத்திமூன்றாவது பிறந்த தினத்தன்று (ஜனவரி 22, 1970) அவருக்கு அளிக்கப்பட்ட சிறப்பு மலரில் வெளியான கட்டுரையின் தமிழ் வடிவம்.]

# ராமாயணம்

ராஜாஜி

"அன்புக்குரிய அங்கதனை அநாதையாக விட்டுவிட்டு, என்னையும் திக்கின்றி விட்டு விட்டுத் திரும்பி வராத பிரயாணத்தில் போய் விட்டாயே! என் வீரனே!" என்று தாரை அழுது புரண்டு அங்கேயே உயிர் நீப்பேன் என்றாள்.

ஹனுமான் ஆறுதல் சொல்லிப் பார்த்தான். "இறந்தவர்கள் தங்களுக்குரிய மேல் உலகங்களை அடைவார்கள். வாலியைப் பற்றித் துக்கப்பட வேண்டாம். அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் ஆகும். அதைக் கண்டு மகிழ்வோம். இப்போது வாலிக்குச் செய்ய வேண்டிய உத்தரக்கிரியைகளை நடத்துவதில் புத்தி செலுத்துவோம். அங்கதனைச் சரியாகப் பாதுகாப்பது நம்முடைய கடமையாகும்" என்றெல்லாம் சொல்லிப் பார்த்தான்.

"எனக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. உத்தரக்கிரியை செய்வதும் அங்கதனை ரட்சிப்பதும் எல்லாம் சுக்ரீவன் பார்த்துக் கொள்வான். என்னால் என்ன செய்ய முடியும்? ஆயிரம் அங்கதர்கள் இருந்தாலும் அது என் புருஷனுக்குச் சமானம் ஆகுமா? என் வீரனுடன் நானும் யமாலயம் செல்வேன். அதுதான் எனக்குச் சந்தோஷம்" என்றாள் தாரை.

நினைவிழந்து மரணத் தறுவாயிலிருந்த வாலி, அச்சமயம் கண்ணைத் திறந்து சுக்ரீவனைப் பார்த்து மெதுவாகச் சில வார்த்தைகள் பேசினான்:

"தம்பீ! நாம் இருவரும் ஒன்றாக இருந்து சந்தோஷமாக ராஜ்யத்தை ஆண்டு அநுபவித்திருக்கலாம். அதற்குக் கொடுத்து வைத்திருக்கவில்லை. என்னுடைய தவறே அதிகம். அதைப் பற்றி இப்போது பேசிப் பயனில்லை. நீ இனி இந்த ராஜ்யத்தை ஆள்வாயாக. எனக்கும் தாரைக்கும் உயிரைவிடப் பிரியமான குமாரன் அங்கதனை உன்னிடம் ஒப்புவித்தேன். அவன் உன்னைப் போன்ற வீரன். எனக்குப் பதிலாக நீயே அவனுக்குத் தந்தையாக இருந்து அவனை அன்புடன் பார்த்து வா. இதுதான் உன்னை நான் கேட்டுக் கொள்வது.

"என் மனைவி தாரை மிகுந்த அறிவாளி. சூக்ஷ்மமான விஷயங்களை அறியும் சக்தி பெற்றவள். இவ்விதம் நடக்கும் என்று அவள் ஒன்றைக் கூறினாளானால் அது அப்படியே நிகழும். சந்தேக



மில்லே. அவன் யோசனையை எந்த விஷயத்தி லும் தட்டாதே.

''இதோ இந்திரன் எனக்குத் தந்த மாலையை என் கையிலிருந்து பெற்றுக் கொண்டு அதன் சக்தியை நீ பெற்று விளங்குவாயாக. என் வாழ்க்கை முடிந்தது. உன்மேல் இப்போது எனக் குக் கோபம் தணிந்து விட்டது. உனக்கு மங்களம் ஆகுக!'' என்று தம்பி சுக்ரீவனை மிகப் பெருந் தன்மையோடு ஆசீர்வதித்தான்.

''அங்கதா! அரசனுகிய சுக்ரீவனிடத்தில் சரி யாக நடந்து கொள். பொறுமையுடன் நடந்து கொள். அன்போடு நடந்து கொள்'' என்று



குமாரனுக்குச் சொல்ல வேண்டியதை யும் சொன்னுன்.

காட்டு விருக்ஷம் வெட்டப்பட்டுக் கீழே விழுந்தால் அதைத் தழுவி ஏறிய இளங்கொடியும் அதை ஒட்டிக் கிடப்பது போல் வாலியைக் கட்டித் தழுவிக் கொண்டு கிடந்தாள், மலர் பூத்த கொடியைப் போன்ற தாரை.

நீலன் வாலியின் மார்பில் குத்தி நின்ற பாணத்தை மெள்ள எடுத்து அகற்றினன். உடனே காயத்திலிருந்து மலையருவி போல் ரத்தம் பொங்கி எங்கும் பரவிற்று. வாலியின் உயிர் உடலை விட்டுப் பிரிந்தது. ''ஐயோ !'' என்று தாரை அழுதாள்.

''அங்கதா ! உன் தகப்பனைக் கடைசியாக வணங்குவாய்'' என்றாள்.

''உங்களுடைய பிரிய மகன் வணங்கி நிற்கிறனே ! அவனுக்கு ஒன்றும் சொல்ல மாட்டீர்களா? நான் விதவை யானேன். மகனும் திக்கற்றுப் போனன் !'' என்று இதயம் உடைந்த தாரை பிரலாபித்தாள்.

* * *

இதை யெல்லாம் கண்டு சுக்ரீவ னுடைய உள்ளம் பதைத்தது. தன் குற்றத்தை இப்போது நன்ருக அறிந் தான். 'எனக்குள் மறைந்து நின்று உள்ளே வேலை செய்து வந்த ஆசை என் புத்தியைக் கெடுத்துவிட்டபடியால் அல் லவோ நன்ருக ஆலோசியாமல் வாலி புகுந்த குகையின் வாயிலை மூடிவிட்டு அண்ணனுடைய சம்பத்தை அபகரித்துக் கொண்டு ஆனந்தமாக அநுபவித்தேன்!' என்று தனக்குள் சிந்திக்கலானன்.

நம்மையும் அறியாமல் உள்ளே இருந்து வரும் ஆசை விவேகத்தைக் கெடுத்து விடுகிறது. தவருன முடிவு களுக்கு வந்து விடுகிறேம். பாவங்களில் சிக்கிக் கொள்கிறேம். அதைச் சுக்ரீவன் இப்போது கண்டான். தன் விவேகத் தைக் கெடுத்தது உள்ளே மறைந்து நின்று வேலை செய்த தன்னுடைய ஆசை என் பதைக் கண்டான்.

காமம் என்கிற பொதுப் பெயர் வடமொழியில் எல்லா வகை ஆசைகளை யும் குறிக்கும். காமமே மனிதனுக்கு உட்பகை. அந்தச் சத்துருவை ஜயிக்க வேண்டும். இதுவே கீதையில் மூன்று வது அத்தியாயம் கடைசி ஏழு சுலோகங் களில் செய்யப்படும் உபதேசம். ஜஹி சத்ரும் காமரூபம் துராஸதம் என்று முடிக்கிறன் கண்ணபிரான்.

சுக்ரீவனைக் கெடுத்தது ஆசை. வாலி யின் விவேகத்தைக் கெடுத்தது கோபம். சுக்ரீவன் குகையின் வாயிலை மூடிவிட்ட தைக் கண்டதும் ராஜ்யத்தை அபகரிப்ப தற்காகவே சுக்ரீவன் தன் கூட வந்து இப்படிச் செய்தான் என்று வாலி எண்ணி விட்டான். அரக்கனுக்குத் தன்னைப் பலி கொடுத்து விட்டு, தன் னுடைய பதவியை அபகரித்துக் கொள் ளப் பார்த்தானே என்று மனத்தில் சுக்ரீவனைப் பற்றி முடிவு செய்து கொண்டு, பொங்கிய கடுங்கோபத்துக்கு இரையானன். உடன்பிறந்த தம்பியை அவமானப்படுத்தி, ஊரை விட்டுத் துரத்தி விட்டுச் சினத்தை வளர்த்துக் கொண்டே போனன். கோபம்—'மன்யு' என்று கோபத்தின் மூலத்திற்கு வட மொழியில் பெயர் — இது வாலியை ஏமாற்றி அவனைப் பாவத்தில் தள்ளிற்று.

'காமம்' 'மன்யு' இவை இரண்டும் எல்லாக் குற்றங்களுக்கும் காரணம். இவற்றை உள்ளம் என்கிற கோட்டைக் குள் விடாமல் மனத்தைக் காப்பாற்றி ஞல்தான் தப்புவோம்.

* * *

சுக்ரீவன் பிரலாபிக்கலானன்: ''நான் எவ்வளவு பெரிய குற்றம் செய்தாலும் என்னைக் கொல்லாமல், 'ஓடிப் போ, உயிர் தப்பிப் பிழை!' என்று சொல்லி அண்ணன் என்னைத் துரத்தினன். அவ் வளவே! நானே அவனைக் கொல்லச் சதி செய்து அவனைக் கொன்றும் விட் டேனே! என்னைப் போன்ற பாதகன் உலகத்தில் இல்லை. சாகும் தறுவாயில் 'ராஜ்யத்தை நீ எடுத்துக் கொள்' என்று என்னிடம் சொல்லித் தன் னுடைய ராஜ்யத்தையும் இந்திரன் தந்த சக்தி மாலையையும் தன் கையால் எனக்குத் தந்தானே ! இவனல்லவோ மகான்! நீசனுகிய நான் உயிர் வைத் துக் கொண்டு பிழைப்பதில் என்ன பயன் ! உலகத்துக்கு ஒரு சூரனுக இருந்த என் அண்ணனைக் கொன் றேனே '' என்று தன் பெருங் குற் றத்தை உணர்ந்து அழுதான்.

* * *

வ்ருஷத்துக்கு ஒரு முறையாவது, 'காமோகார்ஷீத்' 'மன்யுரகார்ஷீத் - சந்தியைப் பிரித்தால் — காம: அகார் ஷீத். மன்யு: அகார்ஷீத் — அதாவது 'ஆசை என்னை ஏமாற்றிப் பாபம் செய்யச் செய்தது' 'கோபம் என்னை ஏமாற்றிப் பாபம் செய்யச் செய்தது' என்று வருந்தி அடக்கத்துடன் பல தடவை சொல்லி உள்ளத்தைச் சுத்தப் படுத்திக் கொள்வது வைதிகர்களின் ஜப முறை. இதை யாவருமே அனுசரித்தல் வேண்டும். ஜபம் செய்து உள்ளத்தை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். காமோகார்ஷீத், —மன்யுர கார்ஷீத், நாராயணுய நம: **(தொடரும்)**





மண்ணின் மாண்பு

# சொர்க்க பூமி

உலகைப் படைக்கக் கடவுள் முயன்றபோது பூஜ்யர் பீட்டர் அவருக்குப் பலவிதத் தொல்லைகளைக் கொடுத்தார். தமது குரு செய்த காரியங்களுக்கும் பலத்த கண்டனக் குரல் எழுப்பினார். பீட்டருக்கு அவை திருப்தி அளிக்கவில்லை. ஒரு தேசம் மிகப் பெரியதாக இருந்தது. ஒன்று மிகச் சிறியது; ஒன்று ஒரே மலைப் பிரதேசம்; மற்றொன்று சமதரையாக இருந்தது. எதுவும் பிடிக்கவில்லை.

கடைசியில் கடவுள் ''நான் உருவாக்கிய எதுவும் உனக்குப் பிடிக்கவில்லை. உனக்கு ஒரு துண்டு பூமி தருகிறேன். அந்தப் பூமியை உன் விருப்பத்துக் கேற்பப் படைத்துப் பார்!'' என்றார்.

பூஜ்யர் பீட்டரும் தம் பணியில் முழுமூச்சுடன் முனைந்தார். உலகத்திலேயே அதி உன்னத தேசத்தைப் படைப்பதில் கருத்தைச் செலுத்தினார்.

வானளாவும் மலைக் குன்றுகள், அடி முடியில்லாத குன்றும் பிரதேசங்கள், இயற்கைவளம் பாய்ந்தோடும் அருவிகள் - எல்லாமே உன்னதப் படைப்பாக அமைந்தன. இந்தப் பூமியைக் கடவுள் முன் காட்டினார் பீட்டர்.

''ஆகா! பிரமாதம். ஆனால் மனிதன் எங்கே? அந்தச் செங்குத்தான மலைப் பிரதேசங்களில் அவன் எப்படிப் பயிர் செய்ய முடியும்? செங்குத்தாக ஓடும் நதிகளில் எப்படிப் படகோட்ட முடியும்?''

ஒரு கணம் பூஜ்யர் மலைத்தார். பிறகு ''மலைகளில் செழிப்புள்ள மண்ணை அமைக்கலாம். பைன் மரங்களைப் பயிரிடலாம்!'' என்று கூறினார்.

மழை கொட்டு கொட்டென்று கொட்டியது. காற்று பயங்கரமாக வீசியது. அந்தக் கணம் செழிப்புள்ள மண்ணும் பைன் மரங்களும் மலைக் குன்றுகளை அலங்கரித்தன. ஆயினும் இந்தக் கடுமையான சூழலில் மனிதன் எப்படி வாழ முடியும்? பீட்டருக்குத் தம் கைத்திறனெல்லாம் வீணாகிப் போய்விட்டதே என்று வருத்தம் ஏற்பட்டது.

கடவுளுக்கும் பீட்டரின் மீது கருணை பிறந்தது. ''கவலைப்படாதே. நீ பூமியை உண்டாக்கிவிட்டாய். அந்தப் பூமியில் வாழும் திறன் கொண்ட மனிதனை உண்டாக்கி நலமுடன் வாழ வகை செய்கிறேன்!'' என்றார்.

ஆகவே அந்தப் பூமியில் மனிதர்களைக் கடவுள் திடகாத்திரராகவும், மலைகளில் ஏறி இறங்க வலுவுள்ள மூச்சைப் படைத்தவர்களாகவும், கூர்ந்த பார்வையும் மலைப் பிரதேசங்களில் உருளாமலிருக்க அழுத்தமான பாதங்களும் கொண்டவர்களாயும் படைத்தார். சிறிது பெற்றாலும் நிறைவுள்ள நெஞ்சமும், மலையை விட்டு நகராத நன்றி மிக்க இதயமும் கொடுத்தார். அவர்கள்தாம் ஸ்விஸ் மலையேறிகள். ஐரோப்பாவின் இதயம் போன்ற ஸ்விஸ், அவர்களுக்குச் சொர்க்கபூமி.



ஸ்விஸ் நாட்டு நாடோடிக் கதை. - பி. எஸ். மணி

# சிதம்பர ரகசியம்



கதை: கோமதி சுவாமிநாதன்
சித்திரம்: ராஜு



















சற்று நேரத்தில் சின்னசாமி எதிர்பார்த்தபடியே மேலும் இருவர் வருகின்றனர்.
இந்தப் பெரியப்பா சிதம்பரம் எதற்காக இந்த ஒதுப்புறமான இடத்தில் பங்களாவைக் கட்டிக்கிட்டு உட்கார்ந்திருக்கார்?
இப்படி ஏதாவது தோணல் புத்திபோகும்!


மோகனு! நான் சொன்னதையெல்லாம் நல்லா நினைவு வச்சிருக்கியா?
ரங்கதுரை! நான் சொன்னதையெல்லாம் நீ மறந்துடாம இருந்தா சரி!


பங்களா பெரிசா இருக்கு! ஆனால் ஆள் அரவத்தையே காணோமே?
உஷ்! உள்ளேயிருந்து யாரோ வந்துக்கிட்டு இருக்காங்க.


வாங்க! வாங்க! யாரைப் பார்க்கணும்?
பெரியப்பா சிதம்பரம் இருக்கிறாரா? அவரைப் பார்க்கத் தான் வந்திருக்கிறோம். நாங்க அவர் தம்பி குழந்தைங்க.


உள்ளே வாங்க! உள்ளே வாங்க! எஜமான் ஊரிலே இல்லே! ஆனால் உங்களையெல்லாம் கவனிச்சுக்கற பொறுப்பை என்கிட்டே விட்டுட்டுத்தான் போயிருக்காரு!.... நான்தான் இந்த பங்களாவைக் கவனிச்சுக்கிட்டு இருக்கிற வேலைக்கார சின்னச் சாமி.


ஆசையாக முதல் தடவையாகப் பெரியப்பாவைப் பார்க்க வந்தா அவர் ஆப்ஸெண்டாக இருக்காரே!
ஆசை பெரியப்பா மேலேயா? இல்லே அவரோட செல்வத்தின் மேலேயா?
உஷ்! உரக்கப் பேசி எதையாவது உளறிக் கொட்டாதே!

# 1. பாரத மணி

மக்கள் நடமாட்டம் அதிகமில்லாத ஒதுங்கிய இடத்தில் அந்தப் பழைய கட்டடம் இருந்தது. தள்ளி இருந்து பார்த்தால் பாழடைந்த வீடு போல் தான் காணப்படும். அந்தச் சிறு கட்டடத்துக்குள்ளிருந்துதான் உயிர்த் துடிப்புள்ள பத்திரிகை, 'பாரதமணி' தினமும் சூரிய உதயத்துக்கு முன்பே வெளி வந்து கொண்டிருந்தது.

அந்தப் பத்திரிகையில் மிதமிஞ்சிய பரபரப்போ, வெறியைக் கிளறிவிடும் ஆபாசமோ இருக்காது. செய்திகளை எந்த மாதிரி மக்களுக்குத் தெரிவிக்க வேண்டுமோ, அந்தப் பாணியில் மிகுந்த கண்ணியத்துடனும், பொறுப்புடனும் பணியாற்றிக் கொண்டிருந்தது.

''பாரதமணி'' என்ற பெயர், அந்தப் பத்திரிகைக்கு மிகவும் பொருத்தமானதுதான். பாரதத்துக்கே ஒரு வைரமணியாக அது திகழ்ந்தது. பத்திரிகையின் தரத்துக்கும் அமோக விற்பனைக்கும் சம்பந்தம் கிடையாது என்னும் உண்மையைப் 'பாரத மணி' எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது.

**'' பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்**
**நற்றவ வானினும் நனி சிறந்தனவே ''**

என்பதுதான் பாரத மணியின் தாரக மந்திரம். இந்தக் கொள்கையைத் தாங்கி அது வெளியாகிக் கொண்டிருப்பதால்தான் அதனுடைய விற்பனை ஓரளவுக்கு மேல் உயராமல் நின்று விட்டது. மக்களுக்குப் பாரதமணியின் கொள்கையைப் பற்றியோ, பத்திரிகைத் தர்மத்தைப் பற்றியோ அக்கறை இல்லை. அவர்களுக்குத் தினமும் வேண்டியவை, கொஞ்சம் ஆபாசம் கலந்த பரபரப்பான செய்திகள்! அறிவை மயக்கி, சதை வெறியைக் கிளறிவிடக்கூடிய பரபரப்பும் ரசனையும் தேவை.



அன்று வந்த செய்திகளைச் சேகரித்துத் தொகுப்பதில் உதவி ஆசிரியர்கள் ஈடுபட்டிருந்தார்கள். ஒரு செய்தியையும், அதற்கேற்ற தலைப்பையும் உதவி ஆசிரியர் முருகானந்தம் படித்துவிட்டு முகத்தைச் சுளித்தார்.

''இதென்ன சார், ஹோட்டல் கோஹினூர் நியூஸ்....? இதற்கு ஒரு தலைப்பு வேறு?'' என்றார், எதிரே இருந்தவரைப் பார்த்து.

மூக்குக் கண்ணாடியைத் தள்ளி விட்டுக் கொண்டு தலை நிமிர்ந்த உதவி ஆசிரியர் ராமபத்ரன், ''எது...?



நேற்று இரவு கைது பண்ணினார்களே,—அதுவா?'' என்று கேட்டார்.

''அது, நம்ம நியூஸ் சார்'' என்றான் சாமிநாதன், உற்சாகத்துடன்.

''இங்கே வாய்யா!'' என்றார் முருகானந்தம்.

கையிலிருந்த பென்சிலை மேஜையின்மீது போட்டுவிட்டு எழுந்து முருகானந்தத்தின் பக்கத்தில் போய் நின்றான், சாமிநாதன். அந்தச் செய்தியைச் சுட்டிக்காட்டி, ''இது உன் வேலைதானா?'' என்று கேட்டார் முருகானந்தம். தலையை ஆட்டிவிட்டுச் சிரித்தான் சாமிநாதன்.

''எத்தனை தடவை சொல்வது... நீ வந்து ஒரு மாதம் ஆகிறது; இன்னும் பக்குவமாகவில்லையே....! இந்தச் செய்தியை ஏன் இப்படிக்

கொட்டை எழுத்தில் போட வேண்டும்? இதெல்லாம் ஓர் ஓரத்தில் சிறிய எழுத்தில்கூட அச்சாகக் கூடாது'' என்றார் முருகானந்தம்.

'' இந்த மாதிரிச் செய்திகள்தாம் வாசகர்களைக் கவரும்'' என்றான் சாமிநாதன்.

''அது எங்களுக்கும் தெரியும். இதை ஆசிரியர் பார்த்தால், கிழித்து உன் தலை மீதுதான் போடுவார்.''

''சார், இது பரபரப்பான செய்தி சார்......''

''கோஹினூர் ஹோட்டலில் யாரோ ஓர் ஆணும் பெண்ணும் குடித்துவிட்டுக் கும்மாளம் அடித்ததையெல்லாம் ஒரு செய்தியாகப் போடுவதற்கு நம்முடைய பத்திரிகை லாயக்கில்லை, தெரியுமா?''

'' இது பிரபல நட்சத்திரம் சசிரேகா....''

''சினிமா நட்சத்திரம் என்றால் உடனே அபத்த விஷயத்துக்குக்கூட முக்கியத்துவம் தந்துவிட வேண்டுமாக்கும்!'' என்று எரிந்து விழுந்து கொண்டே அந்தச் செய்தி அடங்கிய தாளைக் கசக்கிக் குப்பைக் கூடையில் வீசினார் முருகானந்தம். தலையைச் சொறிந்து கொண்டே அதிருப்தியுடன் தன் இடத்தை நோக்கி நடந்தான், சாமிநாதன்.

'':ஆசிரியர் வந்துவிட்டார்'' என்று அந்த அறைக்குள் வந்து பறைசாற்றினாள், ஸ்டெனோ டைப்பிஸ்ட் பிரேமா. அந்தப் பெரிய அறையிலிருந்த மூன்று உதவி ஆசிரியர்களும் ஆசிரியரைச் சந்திக்க அவருடைய அறைக்கு விரைந்தார்கள்.

'' ஏதாவது விசேஷச் செய்தி உண்டா?'' — முரளி கேட்டான்.

''மத்தியானம் யாரோ போனில் கூப்பிட்டுப் பயமுறுத்தினானாம்'' என்றார் ராமபத்திரன்.

முரளி புருவங்களை நெறித்தான். மேலே சொல்லு என்கிற பாவனையில் தலையைச் சொடுக்கினான்.

''போன் ஆபரேட்டர் சொன்னான்.''

''என்னவாம்?''

''கம்யூனிஸ்ட் கட்சி மகாநாடு பற்றி நம்முடைய விமரிசனத்தைப் பற்றிச் சொல்லித்தான் எச்சரித்தானாம்.''

இதைக் கேட்டு முரளி சிரித்துக் கொண்டான்.

''ஓஹோ... நம்முடைய தலையங்கம், அந்த அளவுக்கு அவர்களை உறுத்தி விட்டதாமோ?'' என்றான்.

''இன்று இரவு பொதுக் கூட்டம் இருக்கிறது'' என்றார் முருகானந்தம்.

''அதை ஃபாலோ பண்ண யாரை அனுப்பலாம்? சாமிநாதன் போகட்டுமே?'' என்றான் முரளி. பக்கத்தில் திரும்பி, சாமிநாதனைப் பார்த்தான். சாமிநாதன், தலையை அசைத்தான்.

''இவன் வேண்டாம். அங்கே போய் ஏதாவது விமரிசனம் செய்து சண்டை இழுத்து விடுவான். தொழிலாளர் கூட்டம். ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்'' என்றார், முருகானந்தம்.

''இவனுக்கு நிருபர் பொறுப்பும் உண்டே... இவனே போகட்டும்'' என்று முரளி அழுத்திச் சொல்லவே, முருகானந்தம் மறுக்கவில்லை.

முரளியின் மேஜைமீதிருந்த போனில் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்து முரளி பேசத் தொடங்கினான்:

''ஹலோ... பாரதமணி எடிட்டர் பேசுகிறேன்.... எஸ், முரளிதான் பேசுகிறேன்... யார்? சினிமா சக்கரவர்த்தியா?.... ஓ, அவரா?... உம்... உம்... வருத்தப் பட்டாரோ? .... எப்படிப் பொய்யை எழுதுவது? பாரதமணி பொய் சொல்லாதே....பாரத மணியின் அபிப்பிராயம் அது...நான் ஸென்ஸ்...''

போனை 'டக்'கென்று வைத்தான் முரளி. சிறிது நேரம் சிந்தனையில் இருந்தான். பிறகு எதிரே இருந்த உதவி ஆசிரியர்களைப் பார்த்தான்.

''யார்...?'' என்று முருகானந்தம் கேட்டார்.

''நம்முடைய சினிமா விமரிசனம் சந்திரமோகனுக்கு மன வருத்தத்தைக் கொடுத்ததாம். அவருடைய காரியதரிசி பேசுகிறான். மன்னிப்புக் கோரும் பாணியில் மீண்டும் ஒரு விமரிசனம் எழுத வேண்டுமாம்'' என்றான் முரளி, சிரித்துக் கொண்டே.

அரை மணி நேரத்துக்குப் பிறகு, உதவி ஆசிரியர்கள் தங்கள் அறைக்குத் திரும்பினார்கள். ஸ்டெனோ டைப்பிஸ்ட் பிரேமா, மாலை வந்த கடிதங்களுடன் முரளியின் அறைக்குள் நுழைந்தாள். கடிதங்களைப் பிரித்து அவனுடைய மேஜையின் மீது வைத்தாள்.

''சிவராமன் போன் பண்ணினார்'' என்றாள் பிரேமா.

''என்ன சொன்னான்?''

''உங்களைக் கேட்டார். பிறகு போன் செய்து கொள்வதாகக் கூறிவிட்டார்.. கொஞ்ச நேரத்துக்கு முன் சாரதா வந்திருந்தாள்...''

''எங்கே? இங்கேயா? உடனே போய் விட்டாளா?'' என்று பரபரப்புடன் கேட்டான் முரளி. அவனிடம் தோன்றிய பரபரப்பையும், ஆவலையும் கண்டு தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள் பிரேமா.

'' நான் இருக்கச் சொன்னேன். உங்கள் அறைக்குள்ளேயே போய்

இருக்கும்படி கூடச் சொன்னேன். இன்னொரு சமயம் வருவதாகக் கூறி விட்டுப் போய்விட்டாள்.'' அவள் அவனைக் கூர்ந்து பார்த்தாள். அவன் கண்கள் பிரகாசித்தன. தன்னைக் கவனிக்கிறாள் என்பதை உணர்ந்து கொண்ட முரளி பேச்சை மாற்றினான்.

''பேப்பர் மில்லுக்கு அந்தக் கடிதத்தை டைப் அடித்து விட்டாயா?'' என்று கேட்டான்.

''ஓ....தபாலிலும் சேர்த்து விட்டேனே, கையெழுத்துப் போட்டீர்களே, மறந்துவிட்டீர்களா?''

''சரி... நீ போ'' என்று கூறிவிட்டு எழுந்தான், முரளி.

**மா**டியிலிருந்து கீழே இறங்கி அச்சு இயந்திரம் இயங்கும் அறைக்குள் நுழைந்தான். முரளியைக் கண்டதும் மாதிரிக்காக அச்சடித்திருந்த அன்றைய பத்திரிகையின் இதழ்களை எடுத்துக் கொடுத்தார் கம்போஸர். மூன்றாவது பக்கத்தில் ஒரு தலைப்பைப் பார்த்து விட்டு, அதற்குக் கீழே உள்ள செய்தியைப் பார்த்தான் முரளி.

''இதோ நாலாவது பத்தியிலிருக்கும் இந்தத் தலைப்பை மாற்ற வேண்டும்'' என்றான். ''சட்டசபை அங்கத்தினர்களின் கேவலமான நடத்தை என்பதை, அங்கத்தினர்களின் கட்சி மாற்றம் என்று மாற்றிவிடுங்கள்.''

''சரி சார், அப்படியே செய்துவிடுகிறேன்'' என்றார் கம்போஸர்.

''இதை எப்படிக் கவனியாமல் முருகானந்தம் விட்டார்? அவர் பார்வைக்கு இந்தப் பக்கத்தைக் கொண்டு வராமலேயே சாமிநாதன் பிரஸ்ஸுக்கு அனுப்பியிருப்பானோ?'' என்று முரளி முனகிக் கொண்டே வெளி வராந்தாவுக்கு வந்தான். வாசலில் உட்கார்ந்திருந்த வேலையாளிடம் சாமிநாதனை அழைத்து வரப் பணித்துவிட்டு வராந்தாவை விட்டுக் கீழே இறங்கி, தோட்டத்தில் அமைந்திருந்த புல் வெளிக்கு வந்தான்.

சாமிநாதன் வந்து சேர்ந்ததும், இருவரும் புல்வெளியில் நடந்து வாசலில் நின்ற காரை நோக்கிச் சென்றார்கள்.

''சட்டசபை அங்கத்தினர்களின் கேவலமான நடத்தை என்று தலைப்புக் கொடுத்தது நீதானே?'' என்று கேட்டான், முரளி. சாமிநாதனும் சற்று யோசித்தான். அசட்டுச் சிரிப்பு உதடுகளில் நெளிந்தது.

''ஆமாம் சார்... அதை... '' என்று இழுத்தபடி முரளியைப் பார்த்தான்.

## 007 வந்தாலும் நடக்காது!



குண்டு துளைக்காத கவச அங்கி, மேற்கு ஜெர்மனியில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. போலீஸ்காரர்கள், மெய்க்காப்பாளர் ஆகியோர் இதைப் பாதுகாப்பாக அணிந்து கொள்ளலாம். எஃகினால் செய்யப்பட்ட இந்த அங்கியையும் கவசக் குல்லாவையும் குண்டு துளைக்காது.

பூ. பி. எஸ்.

''அந்தத் தலைப்பை நீதான் கொடுத்திருப்பாய் என்று எப்படிக் கண்டுபிடித்தேன் என்கிறாயா? தலைப்பே உன்னைக் காட்டிக் கொடுத்து விட்டதே. செய்தியை உள்ளபடி மக்களுக்குக் கொடுப்பதுதான் பத்திரிகையின் கடமை. செய்தியைப் பற்றிய விமரிசனத்தையோ, அபிப்பிராயத்தையோ கொடுப்பது கூடாது. விமர்சனம் இருக்க வேண்டிய இடம், தலையங்கம். இல்லையென்றால் கார்ட்டூன். விமர்சனத்தைச் செய்தியோடு சேர்த்துக் கொடுப்பது அநாகரிகம். இதை உனக்கு எத்தனையோ தடவை சொல்லியாகிவிட்டது. இன்னும் நீ புரிந்து கொள்ளவில்லையே?'' என்றான் முரளி மிகுந்த எரிச்சலுடன்.

''ஒரு கட்சியின் ஆதரவில் தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டு, பிறகு வேறு

கட்சிக்கு மாறும் துரோகச் செயல், கேவலமானதுதானே சார்...?'' என்று பரிதாபமாகக் கேட்டான் சாமிநாதன்.

''உனக்கு அந்த நடத்தை கேவலமானதாகத் தெரிகிறது. ஆனால், அதைச் சொல்ல வேண்டிய இடத்தில், சொல்ல வேண்டிய விதத்தில்தான் சொல்ல வேண்டுமே தவிர...''

''செய்தியைப் படித்ததும் ஏதோ ஒரு வேகத்தில்...''

''வேகம், வெறி யெல்லாம் ஒரு கண்ணியமான பத்திரிகைக்கு இருக்கக் கூடாதவை. வெறியூட்டும் செய்தியைக் கூடப் பக்குவமாக வெளியிடுவதுதான் நமது லட்சியம். பத்திரிகையின் பண்பாடும் அதுதான்.... சாமிநாதன்! நீ நினைக்கிறது எனக்குப் புரிகிறது. மக்களைக் கவர வேண்டும் என்கிறாய். கீழ்த்தரமான கவர்ச்சியை ஊட்டி, மக்களின் மட்டமான உணர்வைக் கிளறும் கேவலமான வியாபாரத்தைச் செய்யவில்லை நாம்....'' என்று கூறிவிட்டு, சிரித்துக் கொண்டே சாமிநாதனின் தோளில் ஒரு தட்டுத் தட்டிவிட்டுக் காருக்குள் ஏறி உட்கார்ந்தான், முரளி.

சாமிநாதன் சற்றுத் திகைத்துப் போய் நின்று கொண்டிருந்தான். கார், புழுதியைக் கிளப்பிக் கொண்டு சென்று மறைந்த பிறகும் சற்று நேரம் அங்கேயே நின்றான். பிறகு விரைந்து அச்சுக் கோக்கும் அறைக்குள் நுழைந்தான்.

''மூன்றாவது பக்கத்தில் ஒரு திருத்தம் செய்ய வேண்டும்.... அந்த ஷீட்டை எடுங்கள்'' என்றான்.

''அதை அப்போதே ஆசிரியர் திருத்திக் கொடுத்து விட்டுப் போய்விட்டாரே'' என்று கூறிக் கொண்டே அச்சடித்த தாளை அவனிடம் நீட்டினார், கம்போஸர்.

அவன் எழுதியிருந்த தலைப்பு திருத்தப்பட்டிருந்ததைப் பார்த்தான் சாமிநாதன்.

''பண்பு லட்சியம் என்று சொல்லிக் கொண்டிருந்தால் பத்திரிகையின் விற்பனை உயருமா?'' என்று முரளி முனகிக் கொண்டே மாடிக்கு வந்தான். மாடியில் முன் பக்கத்து அறையில் டைப் அடித்துக் கொண்டிருந்த பிரேமா, குறும்புச் சிரிப்புடன் அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

''என்ன சாமிநாதன் சார், எடிட்டர் ஏன் கூப்பிட்டார்?'' என்று கேட்டாள்.

''உம்... விருந்து சாப்பிட...'' என்றான் சாமிநாதன் எரிச்சலுடன்.

''அப்படித்தான் இருக்கும் என்று நினைத்தேன். உங்கள் முகமே சொல்லுகிறதே... ஏன் சார், சசிரேகா நியூஸ் எப்படி இருக்கிறது?''

''அதற்கு வேறு பத்திரிகையைத்தான் வாங்கிப் படிக்க வேண்டும். பாரத மணியில் அதெல்லாம் இருட்டடிப்புத்தான்'' என்றான் சாமிநாதன்.

பக்கத்திலிருந்த போனில் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்துப் பேசினான்.

''ஹலோ... பாரதமணிப் பத்திரிகை ஆபீஸ்.... யார்? எடிட்டர் வேண்டுமா? நீங்கள் யார்?.... யார், சாரதாவா?''

அவன் கையிலிருந்த ரிஸீவரை வெடுக்கென்று பிடுங்கினாள், பிரேமா. பிறகு பேசத் தொடங்கினாள்.

''யார்...? நமஸ்காரம்.... அவர் இப்போதுதான் போனார்... எப்போ வருவார் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. வந்தால் ஏதாவது சொல்ல வேண்டுமா? சரிங்க...''

ரிஸீவரைக் கீழே வைத்த பிரேமாவின் பார்வையில் குறும்புத்தனம் இருந்தது.

''நான் பேசமாட்டேனா? போனைப் பிடுங்குவானேன்?'' என்றான் சாமிநாதன், அவளை முறைத்துப் பார்த்துக் கொண்டு.

''பேசியது சாரதா. அதனால்தான்'' என்றாள், பிரேமா.

''அதனால் பிடுங்க வேண்டுமோ?''

''சார், இது எடிட்டருடைய சொந்த விஷயம்...''

''ஓ....! யார் இந்தச் சாரதா?'' — ஆவலோடு கேட்டான் சாமிநாதன்.

''பெண்தான்.''

''அதுதான் குரலிலேயே தெரிந்து கொண்டேனே, ஆள் யார்?''

''எடிட்டருக்குத் தெரிந்தவள். அவ்வளவுதான் நியூஸ் தர முடியும்'' என்று கூறிவிட்டு அவனைப் பார்த்துச் சிரித்தாள். பிறகு மேஜையைப் பூட்டிவிட்டு வீட்டுக்குப் போக எழுந்தாள், பிரேமா.

''சாமிநாதன் சார், சசிரேகா நியூஸ் ஃபாலோ பண்ணுங்கள்'' என்றாள் பிரேமா. குறும்பாகச் சிரித்தாள்.

திரும்பி அவளை முறைத்துப் பார்த்துவிட்டுச் சென்றான் சாமிநாதன். பிரேமா சிரித்துக் கொண்டே மாடியிலிருந்து இறங்கிச் சென்றாள்.

(தொடரும்)

**இவருக்கு இதுவும் தெரியும்**

நேர்ந்த அரசியல்வாதியாகவும், ஆயிரக் கணக்கானோரை ஆனந்தமடையச் செய்யும் அற்புதப் பேச்சாளராகவும், ஏடுகளைப் புரட்டுவோரின் எண்ணத்தை ஒருமிக்க வசப்படுத்தும் எழுத்தாற்றல் படைத்தவருமான இந்த ம. பொ. சி. ;—

அச்சுத் தொழிலும் தெரிந்தவர் ! அச்சுக் கோக்கவும் சளையாதவர்!

''இரண்டு வகுப்புதான் படித்தேன். பிறகு பைண்டிங் 'ஃபாரம்' மடிக்கத் தொடங்கி, புரூப் ரீடராகி, கம்பாஸிடர் ஆனேன் ! டாக்டர் வரதராஜுலு நாயுடுவின் 'தமிழ்நாடு' பத்திரிகையில், டாக்டர் நாயுடுவின் கையெழுத்தைப் புரிந்து கொண்டு கம்போஸ் செய்து வந்தவன்!... வெளியூர்ச் செய்திகள் அந்தக் காலத்தில் அதிகம்.... பலதரப்பட்ட நிருபர்களின் கோணல் மாணலான அவசரக் கையெழுத்தைப் புரிந்து, கம்போஸ் செய்து போர்மேனிடம் நல்ல பேர் வாங்கினேன் !'' எனப் பழங்காலச் சம்பவங்களை நினைவுக்குக் கொண்டு வந்தார்.

அதுவும் அண்மையில் அறுபத்தைந்தாவது பிறந்த நாள் விழா நடைபெற்றுக் கொண்டிருந்த போது !

வெளிநாடு புறப்படும் வேலையாகப் பரபரப்புடன் அங்குமிங்கும் சென்றுகொண்டிருந்த வேளையில், ம. பொ. சி.யைச் சந்திக்க நேர்ந்தது. இருந்த போதிலும், தாம் தொழிலாளியாக இருந்த நாட்களைப்பற்றிப் பெருமையுடன் சொல்லிக் கொண்டார்.

''மவுண்ட்ரோட்டில்ஷண்முகம் பிரஸ் என ஒன்று நடந்து வந்தது. (இன்றைய காசினோ தியேட்டருக்குப் பக்கத்துச் சந்தில்) அங்கேதான் கம்பாசிடராக (அதாவது அச்சுக் கோப்பவராக) நான் சேர்ந்தேன். மாதம் இரண்டு ரூபாய் சம்பளம் ! பல வருஷ அநுபவத்துக்குப் பின், கடைசியாக வாங்கிய சம்பளம் ரூபாய் பதினறு !'' என்றும் தெரிவித்தார் ம. பொ. சி.

அரசியல், இலக்கியம், பொது மேடைகளுக்கு மத்தியில், வீட்டில் சொந்தமாக அச்சகம் வைத்து நடத்தி வருபவர்.

'மே தினப் புரட்சி', 'பிரிவினை வரலாறு' என்ற இரண்டு நூல்களையும் கையெழுத்துப் பிரதி இன்றியே தாம் எழுத விரும்பிய கருத்துக்களைத் தாமே நேரடியாக அச்சுக் கோத்து, அச்சிட்டிருக்கிறார்! புத்தகங்கள் ஒவ்வொன்றும் முப்பத்திரண்டு பக்கங்கள் கொண்டவை.

## அச்சுக் கோப்பதில் அசகாயசூரர்



1951 - ல், 'செங்கோல்' பத்திரிகையைத் தொடங்கி, நடத்தி வருகிறார். இந்தப் பத்திரிகையின் அச்சுக் கோக்கும் பணியை, 1954 வரை தொடர்ந்து செய்து வந்திருக்கிறார் !

**என்ன யோசிக்கிறீங்க? இந்த இரண்டு கைகளும் 'ஸ்டிக்' பிடிச்சு அச்சுக் கோத்துத்தான் இருக்கு!**



''என்னைப் பார்க்க வருபவர்கள், நேராக நான் அச்சுக் கோக்கும் இடத்துக்கே வந்து, பேசி விட்டுப் போவார்கள்!'' என்றும் கூறினார்.

— ஏ. சுவாமிநாதன்

மேலே உள்ள புகைப்படம் : அந்த நாளைய ம.பொ.சி.



### புதிய யோசனை!

பைசா நகரின் சாய்ந்த கோபுரம் விழுந்து விடாமல் இருக்க பீட்டர் ஹேமாண்ட் என்ற இங்கிலாந்து என்ஜினீயர் சொல்லும் யோசனை: நூறு அடி உயரமுள்ள ஒரு மனிதன் கோபுரத்தைத் தாங்கிக் கொள்வதைப் போல் அமைக்கலாம். கோபுரமும் விழாது. பார்க்கவும் அழகாக இருக்கும். அந்த மனிதன் பன்னிரண்டாவது நூற்றாண்டின் உடைகளை அணிந்திருப்பான். மற்றொரு பலன், உல்லாசப் பிரயாணிகளினுல் கிடைக்கும் வரும்படி அதிகமாகும்.

டெய்லி மிரர் -- ''பாபு''

## முன் கதை

பெங்களூரில் சைக்கிள் கடை ஏழுமலையிடம் பணியாளாகச் சேருகிறான் அருணகிரி. ஏழுமலை கண்டிப்புக்காரப் பேர்வழி; முன்கோபி. கோபம் மூண்டால் கையில் கிடைத்ததை விட்டெறிந்துவிடுவான். அவனிடம் ஒரு நாள் கடத்துவது அருணகிரிக்கு ஒரு யுகம்தான்.

ரிப்பேர் செய்த சைக்கிளைப் பரிசோதனைக்காக எடுத்துச் சென்றபோது இரு பெண்கள் தட்டுத் தடுமாறி விழுந்ததைக் கவனிக்கிறான் அருணகிரி. சைக்கிளை நிறுத்திவிட்டு வருவதற்குள் சல்வார் கம்மீஸ் பெண் நிர்மலா சமாளித்துக் கொள்கிறாள். சாப்பாட்டுக் கூடைக்காரி கனகாவுக்குத் தலைமீது சோற்றுக் கூடையைத் தூக்கி வைக்கிறான். தன் இருதயத்தையும் அவளுக்குத் தூக்கிக் கொடுத்து விடுகிறான். அடிக்கடி பள்ளிக்கூட மரத்தடியில் வந்து அமர்ந்த கனகா - அருணகிரியின் காதல் நெருக்கம் கொள்கிறது.

ஏழுமலையின் மகன் செல்லத்துரை கொடுத்த ஒரு கடிதத்தை அருணகிரி அந்தச் சல்வார் கம்மீஸ் பெண்ணின் வீட்டில் கொண்டு போய்க் கொடுக்க அது பெரும் விபரீதத்தில் முடிகிறது.

அருணகிரியின் சகோதரி முத்தம்மா குடிகாரக் கணவன் ரத்தினவேலுவின் அடி உதைகளுக்கு மத்தியில் நாலு பிள்ளைகளையும் வேலைக்காரியாக உழைத்துக் காப்பாற்றினாள். நம்பிக்கும் தன்னுலான உணவு படைத்து வந்தாள்.

இவர்களுக்குக் கதி மோட்சம் ஏற்படுவது போல், அக்குடும்பம் முத்தம்மா வேலைசெய்து வந்த இன்ஜினியர் ராமசந்திரன் வீட்டிலுள்ள அவுட் ஹவுஸுக்குக் குடிபோக நேர்கிறது. அருணகிரி அந்த வீட்டில் உள்ள சல்வார் கம்மீஸ் பெண்ணைப் பார்த்ததும் திடுக்கிடுகிறான். அவன்தான் தனக்குக் காதல் கடிதம் எழுதினதாகக் கூறி மிரட்டி, நிர்மலா அவனை மனக் கவலைக்குள்ளாக்குகிறாள். 'தன் அக்காவுக்குத் தெரிந்தால் அவுட் ஹவுஸைக் காலி செய்யும்படி ஆகிவிடுமே' என்ற கவலை பிடித்துக் கொள்கிறது அருணகிரிக்கு. ஆகவே அவுட் ஹவுஸுக்கு வெகு நேரம் கழித்து வரத் தொடங்குகிறான். சைக்கிள் கடை வேலை முடிந்ததும் லெல் பார்க்கில் பொழுதைப் போக்கி வருகிறான். அங்கே அவன் சந்திக்கும் ஆயாக்காரியும் சைக்கிள் ஓட்டும் குழந்தையும் அவனைக் கவர்கிறார்கள். ஆயாக்காரி தன் கஷ்டங்களை அருணகிரியோடு பகிர்ந்து கொள்கிறாள்.

அன்று அவுட் ஹவுஸில் அருணகிரி மூன்று கால் சைக்கிள் சித்திரத்தை வரைந்து அதைத் தயாரிக்கும் விதத்தை எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தபோது இரவு மணி இரண்டாகி விட்டது. அப்போது அருகில் நிர்மலா வந்து நின்று, ''மிஸ்டர் இங்கே கொஞ்சம் வருகிறீர்களா?'' என்று கேட்டதும் அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

மேலே கதையைத் தொடரலாம்.

# காணக் கிடைக்காத தங்கம்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் பதினேழு

கையிலிருந்த காகிதத்தை அவசரமாக மடித்துக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தபடி வெளியே வந்தான் அருணகிரி.

அவனை நோக்கி ஒரு மோகனப் புன்னகை உதிர்த்த அந்தப் பெண் சட்டென்று நிமிர்ந்து முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு, ''இப்படி வாங்க மிஸ்டர்! உங்களிடம் ஒரு விஷயம் பேச வேண்டியிருக்கிறது'' என்று சொல்லிக் கொண்டே அருகிலிருந்த கார் ஷெட்டை நோக்கி நடந்தாள்.



ஒன்றும் புரியாமல் அலங்க மலங்க விழித்தபடி அவளைப் பின்தொடர்ந்து சென்றான் அருணகிரி.

கார் ஷெட் கதவுகளில் ஒன்று மட்டும் திறந்திருந்தது. உள்ளே கார் நிறுத்தி வைக்கப் பட்டிருந்தது. நல்ல இருட்டு. ஆனால் அவள் கொஞ்சமும் தட்டுத் தடுமாற்றமின்றி ஷெட்டினுள் சென்று காரின் பக்கவாட்டில் ஒயிலாகச் சாய்ந்து நின்று கொண்டாள்.

பீதியால் நடுங்கிய அருணகிரி கதவருகிலேயே தயங்கி நின்றான்.

''சும்மா வாங்க மிஸ்டர்! உங்களை நான் ஒண்ணும் தின்னுட மாட்டேன்!'' என்று குறும்புக் குரலில் சொல்லிக் கொண்டே அவனுடைய சட்டையைப் பிடித்து இழுத்தாள் நிர்மலா.

அவள் இழுத்த வேகத்தில் அருணகிரி அவளது மார்பிலே வந்து மோதிக்

கொண்டு மறு கணம் பதற்றத்துடன் பின்னால் சாய்ந்தான்.

இதைக் கண்டு நிர்மலா ஓசையின்றிக் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள். சிரித்துக்கொண்டே காரின் உள் விளக்கைப் போட்டாள். வெளிச்சத்தைக் கண்டதும் ஓரளவு பயம் நீங்கி நிமிர்ந்து நின்றான் அருணகிரி. ஆனாலும் அவனது மனத்தின் நடுக்கம் இன்னமும் தீர வில்லை.

''ஆமாம்; நானும் பார்க்கிறேன், உங்க அக்கா இந்த வீட்டுக்குக் குடி வந்ததிலிருந்து உங்களைப் பகல் பொழுதில் ஒரு நாளும் பார்க்க முடியறதில்லையே ஏன்?'' என்று புருவங்களை நெளித்தபடி தணிந்த குரலில் கேட்டாள் அவள்.

''ஆமாங்க!... நான் விடியற்காலம் போனால் ராத்திரிதான் வரேன்'' என்று நடுக்கக் குழறலுடன் சொன்னான் அருணகிரி.

''அதுதான் எதற்குன்னு கேட்கிறேன்?''

''வேலை அப்படி...''

''என்ன வேலை?''

''உங்களுக்குத்தான் தெரியுமே!''

''அது தெரியும். ஆனால் அந்தச் சைக்கிள் ரிப்பேர்க் கடை காலை எட்டு மணிக்குத் திறந்து ராத்திரி எட்டு மணிக்கு மூடப்படுது. நீங்க சாயந்திரம் ஆறு மணிக்கே போயிடறீங்க இல்லையா?''

அவளை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்த அருணகிரி சட்டென்று தலை குனிந்து கொண்டு, ''ஆமாங்க...'' என்று இழுத்தான்.

''பின்னே ஏன் விடியற்காலம்பறப் போய் இருட்டி எட்டு மணிக்கப்புறம் வரணும்?''

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லத் தோன்றாமல் திருதிருவென விழித்தான் அருணகிரி.

''நீங்க இப்படிப் பகல் நேரத்திலே வீட்டில் தலை காட்டாமல் இருக்கிறதுக்குக் காரணத்தை நான் சொல்லட்டுமா?''

அளவு கடந்த அச்சத்தாலும் பரபரப்பாலும் தலை நிமிரவே அவனால் முடியவில்லை. கீழே எதையோ போட்டு விட்டுத் தேடுபவன் போல் அங்குமிங்கும் பார்த்தபடி மெல்லப் பின்னால் நகர்ந்து கொண்டேயிருந்தான்.

''என்னை நேரில் பார்க்க உங்களுக்குப் பயம்!... இல்லை, இல்லை; நான் உங்களைப் பார்த்து விடுவேனோ என்ற அச்சம் — அப்படித்தானே?''

தன்னையறியாமலே 'ஆம்' என்பது போல் தலையாட்டி விட்டான் அவன்.

அவளுக்குச் சுரீலெனக் கோபம் வந்தது. ''என்னைப் பார்க்கப் பயமா?... பொய்! என்மீது உங்களுக்கு வெறுப்பு, இல்லையா?''

''வெறுப்பா?... ஐயையோ!... அப்படியெல்லாம் ஒண்ணுமில்லீங்க!''

''நடிக்கறீங்க மிஸ்டர்! எனக்கு உங்களைத் தெரியும். ஏதோ துணிச்சலிலே காதல் கடிதம் எழுதினீங்க. அதற்குச் சரியான பதில் கிடைக்காததாலே....''

''சத்தியமாச் சொல்றேங்க! அந்தக் கடிதத்தை நான் எழுதவே யில்லே!'' என்று பதறினான் அருணகிரி.

இதைக் கேட்டு அவள் களுக்கென்று சிரித்தாள். ''நீங்க எழுதவில்லையா?... சரி!'' என்று குறும்பாகத் தலையாட்டியவள், ''இப்படி என்னை நிமிர்ந்து பாருங்க மிஸ்டர்! நான் உங்க கண்களைப் பார்க்கணும்; அதுகளைப் பார்த்தால்தான் நீங்க சொல்றது நிஜமா, பொய்யான்னு தீர்மானிக்க முடியும்!'' என்று சற்றே அதட்டலாகச் சிடுசிடுத்தாள்.

அவன் பயப்பிராந்தியோடு அவளை நிமிர்ந்து நோக்கினான். அந்த அச்ச உணர்ச்சியில் கூட அவனது கண்கள் தாம் என்ன அழகாகப் பிரகாசித்தன!

அவள் அவனுடைய கண்களையே இமைக்காமல் பார்த்தாள். பார்த்துக் கொண்டே மெஸ்மெரிஸத்தால் கட்டுண்டு மயங்கியவள் போல் அவனை நோக்கி மெல்ல நடந்து வந்தாள். அவனோ பீதியால் நடுங்கியவாறு பின்னால் நகர்ந்து கொண்டேயிருந்தான்.

சட்டென்று சுயப் பிரக்ஞை பெற்றவள்போல் ஒரு சிலிர்ப்புச் சிரிப்புடன் துள்ளித் திரும்பிக் காரின் மேல் வந்து சாய்ந்து கொண்ட அவள் தன்னை மீறிய நாணத்துடன் தலை கவிழ்ந்தாள். பிறகு அலட்சியமாக நிமிர்ந்து, ''ஆமாம்; உங்களை ஒன்று கேட்கிறேன்: நீங்கள் என்னிடம் கொண்டு வந்து கொடுத்த அதே மாதிரிக் கடிதம் ஒன்றை நானும் எழுதிக் கொடுத்தால் என்ன செய்வீர்கள்?'' என்று கேட்டாள் விஷமப் புன்னகையுடன்.

''யாருக்கு?'' என்று குழறிக் கேட்ட அருணகிரி உடனே தன்னைத் திருத்திக் கொள்கிறவன் போல் வேகமாகத் தலையசைத்து விட்டு, ''கொடுக்கச் சொல்கிற ஆளிடம் கொண்டு போய்க் கொடுத்து விடுவேனுங்க!'' என்றான்.

அவள் அவனை முறைத்துப் பார்த்தாள். பிறகு, ''ஓகோ! அப்படீன்னு நாளைக்கு அதைத் தருகிறேன். நீங்க அவசியம் நாளை இதே நேரத்தில் இங்கே என்னைச் சந்திக்கத் தயாரா யிருக்கணும்'' என்று ஒருவிதக் கண்டிப்புடன் கூறிய நிர்மலா, ''அது சரி, நான்

வந்தப்ப என்னமோ எழுதிக் கொண்டு இருந்திங்களே, அது என்ன? வழக்கம் போல் அதுவும் லவ்—லெட்டர்தானா?'' என்றாள் கேலிப் புன்னகையுடன்.

இந்நேரம் தன் இடது கையில் மடித்து வைத்திருந்த அந்தச் சைக்கிள் வரைபடக் காகிதத்தைச் சட்டை ஜேபியில் திணித்துக் கொண்டு அசட்டுச் சிரிப்புடன், ''அது...அப்படியெல்லாம் ஒண்ணுமில்லிங்க!...அது வந்து கணக்கு கணக்கு!...'' என்று உளறினான்.

'' கணக்கா ?'' என்று கேட்டுக் கொண்டே வெடுக்கென்று அவனது ஜேபியிலிருந்து அந்தக் காகிதத்தைப் பிடுங்கி எடுத்துக் கொண்ட நிர்மலா, பட்டென்று காரின் உள் விளக்கை அணைத்து விட்டு அவன்மேல் இடித்து மோதிக் கொண்டு வெளியே போய் விட்டாள்.

என்ன செய்வதென்று தோன்றாமல் வெலவெலத்துக் கிடுகிடுத்து அப்படியே கல்லாய்ச் சமைந்து நின்றான் அருணகிரி. பின்னர் அங்கிருந்து தன் வீட்டு வராந்தாவுக்குப் போய்ப் படுக்கையில் எப்படிச் சாய்ந்தான் என்பது அவனுக்கே தெரியாது.

மறு நாள்.

அன்றையப் பொழுதெல்லாம் அருணகிரி சித்த ஸ்வாதீனம் இழந்தவன்போல் எதிலும் ஒரு நிதானமோ, தெளிவோ பிடிப்போ இல்லாமல் நடந்து கொண்டான். வேலையில் பல தவறுகள் செய்து பலமுறை ஏழுமலையிடம் அசிங்கம் அசிங்கமான வசவுகளை வாங்கிக் கட்டிக் கொண்டான். ஆனால் ஏனோ அன்று அடிக்கவில்லை; அடித்திருந்தால் அவனைத் திருப்பி அடித்து நொறுக்கி விட்டிருப்பான் — அப்படி ஒரு வெறி நிலையில் இருந்தான் அவன்.

யாரைக் கண்டாலும், எதைப் பார்த்தாலும் அவனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. ரிப்பேர்க் கடையில் வாடிக்கையாகத் தம் சைக்கிளுக்குக் காற்று அடித்துக்கொள்ளும் ஒரு புகைப்பட நிபுணர் அன்று அருணகிரியிடம் எதார்த்தமாக ஏதோ தமாஷ் செய்ய, அவரை அவன் எக்கச்சக்கமாக எடுத்தெறிந்து பேசி அடிக்கவே போய் விட்டான். ஏழுமலை ஓடிவந்து தடுத்துச் சமாதானப்படுத்தி யிராவிட்டால் விஷயம் விபரீதமாகக்கூட ஆகியிருக்கும்.

அன்று பகல் ஏழுமலை சாப்பிடக் கூப்பிட்டும் அருணகிரி தனக்குச் சாப்பாடு வேண்டாம் என்று முறைப்பாகச் சொல்லிவிட்டு நேரே அந்தப் பள்ளிக்கூட மதில் சுவரின் மேல் போய் ஏறிப் படுத்துக் கொண்டான். நல்லவேளையாக அன்றைய தினமும் கனகா அங்கு வரவில்லை. வந்திருந்தால் அவளிடமும் ஏதாவது ஏடாகூடமாகப் பேசி மனத்தை நோகடித்து அனுப்பிவிட்டிருப்பான்.

ஏன் இப்படி அவன் இன்று புத்தி மாறாட்டமானவன் போல் எல்லாரிடமும் நடந்து கொள்ளுகிறான்?

நேற்றிரவு அந்தப் பெண் நிர்மலா, 'நீங்கள் என்னிடம் கொண்டு வந்து கொடுத்த காதல் கடிதம் போன்று, நானும் ஒன்று எழுதி உங்களிடம் கொடுத்தால் என்ன செய்வீர்கள்?' என்று கேட்டாளே, அதுதான் அவனுடைய இந்த வெறிப் போக்குக்குக் காரணம்.

ஆமாம்; அதை நினைக்க நினைக்க, அவன் மனம் கொதித்தது. அவமானத்தால் ரத்தமே சிந்துவது போல் வேதனையடைந்தான்.

'செல்லத்துரை அவளுக்குக் காதல் கடிதம் எழுதி என்னிடம் கொடுத்து அனுப்பியது போல் அவளும் அவனுக்குப் பதில் கடிதம் எழுதி என் மூலமே கொடுத்தனுப்ப நினைக்கிறாள்' என்று அவளின் அந்தக் கேள்வியை அர்த்தப் படுத்திக் கொண்டதாலேயே அவன் அத்தகைய குணச் சிதைவுக்கு உள்ளாகி மனம் வதைப்பட்டுக் கொண்டிருந்தான்.

மாலை மணி ஆறு ஆனதும் சாமான்களைச் சரியாகக் கூட ஏறக்கட்டி வைக்காமல் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

''போவட்டும், போவட்டும்! நாளை வருவானில்லே? முட்டிச் சில்லைப் பேத்துப்பிடறேன், பேத்து!'' என்று தனக்குள் கறுவிக் கொண்டான் ஏழுமலை.

ஆறரை மணி இருக்கும்.

கிங்ஸ்பார்க்கின் அந்த வர்ண நீரூற்றுப் பொய்கையைச் சுற்றிப் போடப் பட்டிருந்த சிமெண்ட் பெஞ்சுகளில் ஒன்றில் வந்து களைப்புடன் உட்கார்ந்தான் அருணகிரி.

அன்று பகல் அவன் ஒன்றும் சாப்பிடாததால் பசி வயிற்றைக் குடைந்தது. தன்மீதே வெறுப்படைந்தவனாய்த் தன் பார்வையில் படுவனவற்றை யெல்லாம் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

பொழுது எப்படிச் சாய்ந்ததென்றே தெரியவில்லை. எங்கு பார்த்தாலும் விளக்குகள் எரிந்து அந்தப் பூங்காவை ஒரு சொர்க்க லோகம் போல் ஆக்கின. பொய்கையின் நடுவே இருந்த நீரூற்றும் இப்போது மத்தாப்பூ வர்ணம் போன்று வர்ணத் தாரகைகளைச் சொரியலாயிற்று. என்ன அற்புதமான அழகுக்

# ஸ்ரீ கிருஷ்ண கான சபா

(போன்: 442806 & 441955)

'கான விஹார்' - கிரிபித் ரோடு - சென்னை-17

## கோகுலாஷ்டமி சங்கீத உற்சவம் - 1970

### 1970 ஆகஸ்டு

*சனி 1ந் தேதி மாலை 6 மணிக்கு*
**புளூட் ரமணி - கிருஷ்ணன் - பாலக்காடு மணி**

*ஞாயிறு 2ந் தேதி மாலை 3 மணிக்கு*
**வீணை: கமலா விஸ்வநாதன் & பார்ட்டி**

*மாலை 5-30 மணிக்கு*
**எம். எல். வஸந்தகுமாரி & பார்ட்டி**

*சனி 8ந் தேதி மாலை 6 மணிக்கு*
**M. D. ராமனுஜன் - எம்.எஸ். கோபாலகிருஷ்ணன் - ராமபத்ரன்**

*ஞாயிறு 9ந் தேதி மாலை 3 மணிக்கு*
**குமாரிகள்: பிரேமா - ஜெயா & பார்ட்டி**

*மாலை 5-30 மணிக்கு*
**வீணை: மைசூர் வி. துரைசாமி ஐயங்கார் & குருவாயூர் துரை**

*சனி 22ந் தேதி மாலை 6 மணிக்கு*
**மதுரை சோமு - லால்குடி - ராமபத்ரன்**

*ஞாயிறு 23ந் தேதி மாலை 3 மணிக்கு*
**அஷ்டபதி: வி. சகுண குழுவினரால் ஆலங்குர் நடராஜன் - அம்பி அய்யர்**

*மாலை 5-30 மணிக்கு*
**பாலமுரளி கிருஷ்ண - டி. கேசவலு - முருகபூபதி**

*திங்கள் 24ந் தேதி மாலை 7 மணிக்கு*
**ஹரிகதை: ரகுநாத பாகவதர் & பார்ட்டி**

*செவ்வாய் 25ந் தேதி மாலை 7 மணிக்கு*
**'ஸ்ரீ கிருஷ்ண மாதுரி' (கிருஷ்ண ஜெயந்தி)**
A Musical feature on Krishna Avatar

*சனி 29-ந் தேதி மாலை 6 மணிக்கு*
**இரு வயலின்கள்: எம். எஸ். கோபால கிருஷ்ணன், எம். எஸ். அனந்தராமன் - சிவராமன்**

*ஞாயிறு 30ந் தேதி மாலை 3 மணிக்கு*
**சாரதா நடராஜன் & பார்ட்டி**

*மாலை 5-30 மணிக்கு*
**உஸ்தாத் விலயாத்கான் (ஸிதார்)**
**சாந்த பிரஸாத் (தப்லா)**

### 1970 செப்டம்பர்

*வெள்ளி 4ந் தேதி மாலை 3 மணிக்கு*
**சரோஜா ஸ்ரீநிவாஸன் & பார்ட்டி**

*மாலை 6 மணிக்கு*
**வீணை: சிட்டிபாபு - உபேந்திரன்**

*சனி 5-ந் தேதி மாலை 6 மணிக்கு*
**ஆலத்தூர் ஸ்ரீநிவாஸய்யர் - சந்திரசேகரன் - பாலக்காடு மணி**

*ஞாயிறு 6-ந் தேதி மாலை 3 மணிக்கு*
**எம். பிரபாவதி & பார்ட்டி**

*மாலை 5-30 மணிக்கு*
**புளூட் மாலி & பார்ட்டி**

*சனி 12-ந் தேதி மாலை 6 மணிக்கு*
**பாலக்காடு கே. வி. நாராயணஸ்வாமி கிருஷ்ணன் - பாலக்காடு மணி**

*ஞாயிறு 13ந் தேதி மாலை 3 மணிக்கு*
**வஸந்தா சிவராமன் - ஆலங்குர் நடராஜன் - பாலக்காடு குஞ்சுமணி**

*மாலை 5-30 மணிக்கு*
**செம்மங்குடி - லால்குடி - ரகு வி. நாகராஜன்**

*சனி 19ந் தேதி மாலை 6 மணிக்கு*
**ராமனுதபுரம் கிருஷ்ணன் - வீரராகவன் சிவராமன்**

*ஞாயிறு 20ந் தேதி மாலை 3 மணிக்கு*
**கே. பத்மா - பாபுராவ் - என்.எஸ். ராஜம்**

*மாலை 5-30 மணிக்கு*
**இரு வயலின்கள்: லால்குடி & ஸ்ரீமதி பிரும்மானந்தம் சங்கரன்**

*சனி 26-ந் தேதி மாலை 6 மணிக்கு*
**வோலேடி வெங்கடேச்வரலு டி. ருக்மிணி - முருகபூபதி**

*ஞாயிறு 27-ந் தேதி மாலை 3 மணிக்கு*
**ஜி. கே. ராஜேஸ்வரி-பாபுராவ்-சஞ்சீவி**

*மாலை 5-30 மணிக்கு*
**ஷேக் சின்ன மௌலானா சாஹிப் & பார்ட்டி (நாதஸ்வரம்)**

---

**ஸீசன் டிக்கெட்டுகள்: ரூ. 100, 50, 35 & 20. தினசரி டிக்கெட்டுகள்: ரூ. 10, 5, 3 & 2**

**ஞாயிறு 3 மணி கச்சேரிகளுக்கு அனைவரும் வருக: கட்டணம் கிடையாது**

**டிக்கெட் கிடைக்கும் இடம்: சபா ஆபீஸ்: தினசரி மாலை 6 முதல் 7-30 மணி வரை**

"என்னப்பா, வயிற்று
வலியா? உனது தாயாரை
பயோ-ஸால்
கொடுக்கச் சொல். அது
குழந்தைகளை ஆரோக்
கியமாகவும், சந்தோஷமாக
வும் இருக்கச் செய்கிறது"



TAMIL






# பயோ-ஸால்

(கிரைப் மிக்சர்)

ஜே. & ஜே. டிஷேன்
ஹைதராபாத் - இந்தியா

---

# உங்களுக்குத் தேவை




பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## நெருப்பு - கப்பல் - விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

ஆஸ்திகள் : ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம் : பாண்டியன் பில்டிங், மதுரை-1

கிளைகள் : பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
கோயமுத்தூர், கொச்சி, கோவில்பட்டி

காட்சி அது! ஆனால் அருணகிரியின் மனம் அதில் லயிக்கவில்லை. அவன் சிந்தனை இப்போதும் செல்லத்துரை எழுதி நிர்மலாவுக்குத் தன்மூலம் அனுப்பிய காதல் கடிதம் என்ற அந்த ஒரே விஷயம் பற்றியே கிளறிக் கிளறி ஆராய்ந்து கொண்டிருந்தது. அவனுக்கு இப்போது திடுமென்று ஒரு புதிய கேள்வி மூளையில் பளிச்சிட்டது.

'ஆமாம்; அவள் என்ன சொன்னாள்? நீங்கள் என்னிடம் கொண்டு வந்து கொடுத்த அதே போன்ற கடிதம் ஒன்றை நானும் எழுதிக் கொடுத்தால் என்ன செய்வீர்கள் என்றுதானே கேட்டாள்? இதற்கு நான் எடுத்துக்கொண்ட அர்த்தம் சரிதானா? அது முற்றிலும் தவறு போல் தோன்றுகிறதே!'

அவன் பரபரப்புடன் நிமிர்ந்து உட்கார்ந்து ,தன்னையே ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டான்.

'அதாவது, வேறு எவனோ கொடுத்ததாகப் பொய் சொல்லி நீயே எனக்கு எழுதிய காதல் கடிதத்துக்கு நான் பதில் எழுதி உன்னிடமே தரப் போகிறேன் என்ற அர்த்தத்தில் அவள் அப்படிச் சொல்லி யிருப்பாளோ? அதனால்தான் இன்றிரவும் அவளைச் சந்திக்க அந்தக் கார் ஷெட்டில் என்னை வந்து காத்திருக்குமாறு அத்தனை அதிகார தோரணையில் கட்டளை இட்டு விட்டுப் போனாளோ?'

வியப்பும் மகிழ்ச்சியும் மனத்தில் குதிபோடச் சுற்றுப்புறச் சூழலை மறந்து வாய்விட்டுச் சிரித்த அவன் சட்டென்று சிரிப்பை அடக்கிக் கொண்டு ஏதோ கிலியால் தாக்கப் பட்டவன் போல் நெஞ்சில் கைவைத்துக் கொண்டான்.

'ஐயையோ! இது என்ன, புதுச் சங்கடம்! அவள் எனக்குக் காதல் கடிதம் எழுதிக் கொடுப்பதாவது, நான் அதை வாங்கிக் கொள்வதாவது! அப்படி ஒரு கடிதத்தை வாங்கி வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன்? அவளைக் காதலிப்பதா? அவள் யார், நான் யார்? காதலுக்குக் கண் இல்லை என்பது சரி, ஆனால், பணம், படிப்பு, பவுசு, குலம், கௌரவம் என்று எத்தனை எத்தனையோ கொள்ளிக் கண்கள் அதற்கு உள்ளனவே! அவையெல்லாம் இந்தக் குருட்டுக் காதலை ஹதாஹதம் பண்ணிவிடாவா?'

ஏதோ ஒரு பயங்கரக் காட்சியைத் தன் கற்பனையில் கண்டுவிட்டவன்போல் பயந்து நடுங்கிப் பின்னால் நகர்ந்து உட்கார்ந்தான்.

''ஓ!...தம்பி இங்கே வந்து உட்கார்ந்திருக்குதா?... நேத்து, முந்தாநாளெல்லாம் நான அங்கேயில்லே பார்த்துப் பார்த்து ஏமாந்து போனேன்?''



''அப்பா! நீங்க ஆபீஸ் விட்டு வரும் போது இந்தப் புடவைக்கு மேட்சா ஒரு நோட்டுப் புத்தகம் வாங்கிக்கிட்டுவாங்க!''

திடுக்குற்றுத் திரும்பினான் அருணகிரி. அங்கே அந்த ஆயாக்காரிதான் குமரி நடை போட்டு முகமெல்லாம் சிரிப்பாக வந்து கொண்டிருந்தாள்.

'என்னடா இது வம்பு?' என்று உள்ளூற எண்ணிச் சங்கடப்பட்டுக்கொண்ட அவன் சும்மா மேலுக்கு ஒரு புன்னகையைப் பூசிக் கொண்டு, ''வாங்கம்மா! சௌக்கியமா?'' என்று கேட்டான்.

''ஊம்!'' என்று ஒரு குலுக்குச் சிரிப்புடன் தலையாட்டிக் கொண்டே வந்து அவனெதிரே புல் தரையில் உட்கார்ந்த அவள், ''ஏன் தம்பீ இங்கே வந்துட்டீங்க? அந்த இடம் பிடிக்கலியா?'' என்று குறும்புக் குரலில் கேட்டாள்.

''பிடிக்கலேன்னு எல்லாம் ஒண்ணுமில்லேம்மா!..... பார்க்குத்தானே? எங்கே உட்கார்ந்தால் என்ன? அதான் கால் போன போக்கிலே வந்து இங்கே உட்கார்ந்துட்டேன்'' என்று அசட்டுச் சிரிப்புடன் சொன்னான் அருணகிரி.

''அப்படீன்னா சரி; நான் என்னென்னமோ நினைச்சுப் பயந்துட்டேன்.''

''பயந்துட்டீங்களா? பயப்படறத்துக்கு இதிலே என்ன இருக்குது?''

''அந்த இடத்திலே நான் பிள்ளைகளை அழைச்சு வந்து விளையாட விடறது உங்களுக்குப் பிடிக்கலியோ, அதனால்தான் வேற இடம் பார்த்துக்கிட்டுப் போயிட்டீங்களோன்னு நினைச்சுப் பயந்துட்டேன்!''

''சரிதான் போங்க! குழந்தைப் பிள்ளைகள் விளையாடறதைப் பார்க்க விரும்பாதவங்களும் இருப்பாங்களா? அதைவிட மனசுக்கு உகந்த பொழுது போக்கு வேறே என்ன இருக்க முடியும்?''

''நீங்க இப்படிச் சொல்றீங்க, தம்பி! ஆனால் அதோ அவங்களுக்கு எது பொழுதுபோக்கா இருக்குது பாருங்க!'' என்று சொல்லிக் கலுக்கெனச் சிரித்த

அவன் முகத்தை நீட்டி, கண் சிமிட்டலால் ஓர் இடத்தைச் சுட்டிக்காட்டினாள்.

அருணகிரியும் அவ்விடத்தை நோக்கிப் பார்வையைச் செலுத்தினான். அங்கே ஓர் இளம் காதல் ஜோடி சுற்றுப்புறச் சூழலைத் துப்புரவாக மறந்தவர்களாய் நெருக்கியடித்து உட்கார்ந்து மிக மோசமான சல்லாபங்களில் ஈடுபட்டிருந்தனர்.

இந்தக் காட்சியைக் கண்ட அருணகிரியின் மனம் ஒரு குலுங்குக் குலுங்கிச் சில்லிட்டது. அப்படிச் சில்லிடக் காரணம் அவனது வாலிப உணர்ச்சியை அக்காட்சி சீண்டி விட்டது என்பதல்ல. இதைவிட இன்னும் அசிங்கமான காட்சிகளையெல்லாம் அவன் இதே பார்க்கில் எத்தனையோ நாட்கள், எத்தனையோ தடவைகள் பார்த்திருக்கிறான். ஆனால் இப்போது அக்காட்சியைக் காட்டியவள் ஒரு பெண்மணி — அதுவும் தன்னைவிடப் பத்துப் பன்னிரண்டு வயது மூத்தவள்— என்பதால் அவனுக்கு அத்தகைய அதிர்ச்சிச் சிலிர்ப்பு ஏற்பட்டது. நாணத்தால் முகம் சிவந்து கன்றிப் போகத் தலை குனிந்து கொண்டான் அவன்.

அவள் அவனைக் கடைக்கண்ணால் பார்த்துக் குறுநகை புரிந்தவாறு, ''தூத்தெறி! கசமாலம் புடிச்ச கழுதைங்க! பப்ளிக்கிலே வந்து உட்கார்ந்துக்கிட்டு நாலு பேர் பார்க்கிறாப்பலே.. சே, நாய் சென்மங்க! கண்ணு அவிஞ்சு போச்சாக்கும்!'' என்று முணுமுணுத்துக்கொண்டே அருவருப்புடன் காறித் துப்பினாள்.

அவளின் இந்தப் பேச்சும் செயலும் அருணகிரிக்குச் சற்றே தெம்பு ஊட்டின. அதனால் அவன் மீது ஏற்பட்டிருந்த கசப்பு உணர்ச்சியும் கரைந்தது. மெல்லத் தலை நிமிர்ந்து, ''அது சரியம்மா! இன்னைக்கு அந்தப் பிள்ளைகளைக் கூட்டி வரலியா?'' என்று பேச்சின் திசையை மாற்றிக் கேட்டான்.

''இல்லே தம்பி! இன்னைக்கு நான் வேலைக்குப் போகலே; லீவ் போட்டுட்டேன்!'' என்றாள் அவள் விரக்தி படிந்த குரலில். ''பின்னே என்ன? வருஷம் முந்நூத்தி அறுபத்தைஞ்சு நாளும் பொழுது விடிஞ்சு பொழுது போயி, பாதி ராத்திரி வரை அந்தப் புள்ளைகளோடு மாரடிக்கிறதே பொழைப்பாப் போச்சு. ஒரு நாளாச்சும் ஓய்ச்சல் ஒழிச்சல் கிடையாது. 'லோலோ'ன்னு அதுங்க பின்னாடியே இருக்கணும். செத்த நேரம் கூட அசர மசர விடறதில்லே. அதுங்க விட்டாலும் எசமானிக் கிழவி விடமாட்டாள். 'அடி நீலாம்பா, நீலாம்பா'ன்னு வாய்க்கு வாய் கூப்பிட்டுக்கிட்டே யிருப்பாள். அங்கே போயிட்டு வா, இங்கே ஓடிட்டு வா, அதைச் செய், இதைப் பண்ணுன்னு விரட்டிக்கிட்டே யிருப்பாள். அந்தக் கூத்தை ஏன் கேக்கிறீங்க தம்பி! நாய் படாத பாடு! அதான் இன்னைக்குத் துணிஞ்சு மட்டம் போட்டுட்டு வீட்டிலே அக்கடான்னு விழுந்து கிடந்துட்டேன்.''

எரிச்சலும் சலிப்புமாக இவ்வாறு சொன்ன நீலாம்பாள் என்ற அந்த ஆயாக்காரி, தனக்குத் தானே பேசிக்கொள்கிறவள் போல் மேலும் சொன்னாள்:

''என்னையும் ஒரு பெண் சென்மமா படைச்சிருக்கிறானே ஆண்டவன், அதை நினைச்சா வயிறு பத்தி எரியுது தம்பி! பிறந்த வீட்டிலே சோத்துக்கும் துணிக்கும் படாத பாடு பட்டேன். புகுந்த வீட்டிலாச்சும் சுகத்தைக் கண்டேனா? தாலி கட்டின ரெண்டாம் வருஷமே அந்த மகராசன் என்னைத் தண்ணி மேலே தனிக்க விட்டாப்பலே விட்டுட்டுப் போய்ச் சேர்ந்தான். அதுவும் சும்மா போகலே, ஒரு பொண் குழந்தையை என் கையிலே போட்டுட்டுப் போயிட்டான். அதுவரையிலே மூக்காலே முனகி முட்டுக் கொடுத்துக்கிட்டு நின்ன உத்தார் பெத்தாரும் சட்டி சுட்டதடா, கை விட்டதடான்னு அப்படியே நிர்க்கதியா விட்டுட்டுப் போயிட்டாங்க... ஒண்டியா, ஓரியா நின்னுட்டேன். என்னையும் என் குழந்தையையும் காப்பாத்திக்க வேண்டிய பொறுப்பு என் தலை மேலேயே விழுந்துடுச்சு. ஆப்பம் சுட்டேன், ஆலிலை எதச்சு வித்தேன் — இன்னும் என்னென்னமோ பாட்டாளி வேலையெல்லாம் செய்தேன். ஒருவேளை சோத்துக்கும், ஆறு கஜம் துணிக்கும் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமில்லை. இப்பத்தான் மூணு வருஷமா அந்தப் பார்சிக்காரர் வீட்டிலே ஆயா வேலை செய்யறேன். சாப்பாடு போட்டுச் சம்பளம் முப்பது ரூபாய். இதுக்கு உழைக்கிற உழைப்பு இருக்குதே, எலும்பு நொறுங்கிப் போகுது. எனக்குன்னு பார்த்து ஒரு பொண்ணு பொறந்திருக்குதே, அதுவாச்சும் உதவி, ஒத்தாசையா யிருக்குமா? ஒண்ணுக்கும் உதவாத உளுத்த கட்டை, இம்மாக்கு வயசு பதினேழு ஆகப்போகுது; சோத்துக்குக் கேடு, பூமிக்குப் பாரம். எல்லாம் என் தலையெழுத்து. என்னத்துக்குத்தான் பொண்ணுப் பொறந்து இப்படிப் பதங் குலையறேனோ; அது எனக்கே தெரியலை...''

நீலாம்பாளின் கண்கள் கலங்கின. குரல் கம்மித் தேய்ந்தது. அவள் பேச்சை நிறுத்தி விட்டு மௌனமானாள்.

(தொடரும்)




# KEEP YOUR EYES OPEN

## AN APPEAL TO SHINGAR KUMKUM CONSUMERS

"சிங்கார் கும் கும்"க்கு நீங்கள் அளித்து வரும் அமோகமான அன்பின் ஆதரவு காரணமாக, சந்தர்ப்பவாதிகள் சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு மேலே கண்டுள்ள எமது புகழ்பெற்ற தயாரிப்பைப்போலவே, பாட்டிலின் அமைப்பு, கலர் வகைகள், லேபிள் போன்று எல்லாவிதத்திலும் காப்பி அடித்து — உண்மையான தயாரிப்பென நம்பும்படி எமது மதிப்புமிகுந்த வாடிக்கையாளர்களை எமாற்ற முயற்சி செய்கின்றனர் என்பதை இதன்மூலம் அறிவிக்கின்றோம். ஆகையால், இம்மாதிரிப் போலித் தயாரிப்புக்களைக் கொடுத்து எமாற்ற முயலும் தயாரிப்பாளர்களையும், டீலர்களையும் புறக்கணிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்வதோடு, நீங்கள் கடையில் வாங்கும் போது உண்மையான "சிங்கார் கும் கும்" பாட்டில்தானா என்பதையும் கவனமாகப் பார்த்து வாங்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.




**KUMKUM**

**THE QUALITY KUMKUM FOR BRIGHTER BINDI**
**ALWAYS IMITATED BUT NEVER EQUALLED**

PARAMOUNT PRODUCTS, BOMBAY-31.

# செங்கமலம் இப்பொழுது

எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு நான் எங்கள் ஊருக்கு வருகிறேன். ஊரே மாறிப்போயிருந்தது. எங்கே பார்த்தாலும் பசுமை படர்ந்து நெல் வயலாகப் பரந்து கிடந்த இடமெல்லாம் கட்டடங்களாக மாறி விட்டன. ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஊருக்குப் போய்ச் சேரும் வரையில் முன்பு இருபுறமும் தென்னந் தோப்பு புடைசூழ, ஒரு சிறு வண்டிப் பாதை செல்லும். இப்போது நல்ல ரஸ்தா உருவாகியிருந்தது. ஸ்டேஷனில் மாட்டு வண்டி, குதிரை வண்டிகள் கூட நிறுத்தி வைக்கப் பட்டிருந்தன. நான் பிறந்து வளர்ந்த ஊரே எனக்குப் புதிதாய்த் தெரிந்தது. ஊர் எல்லையை மிதித்ததும், பெருமாள் கோவில், பழைய நாட்களின் அடையாளமாக மாறாமல் அப்படியே இருந்தது. கோவிலை ஒட்டினாற் போல் ஓடிக் கொண்டிருந்த வாய்க்காலும் மாறவில்லை. அப்படியேதான் ஓடிக் கொண்டிருந்தது. முன்பு வாய்க்காலைத் தாண்டிச் செல்ல ஒரு மூங்கில் பாலம் இருந்தது. அந்தப் பாலம் இருந்த இடத்தில் இப்போது ஒரு கான்கிரீட் பாலம் இருந்தது.

ஸ்டேஷனிலிருந்து ஊருக்கு வருவதற்கு அப்பொழுதெல்லாம் வண்டிகள் கிடையா. எல்லாரும் பெட்டி, படுக்கைகளைத் தூக்கிக் கொண்டு நடந்துதான் வருவார்கள்.

வண்டி நகர ஆரம்பித்ததும் என் மனமும் பழைய நினைவுகளை நோக்கி நகரத் தொடங்கியது. கடைசியாக நான் ஊரை விட்டுப் புறப்பட்டுச் சென்னையில் இருந்த என் மாமாவிடம் படிப்புக்காகப் போய்ச் சேர்ந்தபோது எனக்குப் பதினைந்து வயதிருக்கும்.

அந்த நாட்களை நினைத்தாலே எனக்குச் செங்கமலத்தின் நினைவே வந்தது. அவள் என்னைவிட இரண்டு வயது சின்னவள். எங்கள் பக்கத்து வீடு அவளுடையது. அவள் தகப்பனாரும் என் தகப்பனாரும் இணை பிரியாத நண்பர்கள். இருவரும் பெரிய மிராசுதார்கள். அதே மாதிரி நானும் செங்கமலமும் இணை பிரியா நட்புப் பூண்டிருந்தோம். எடுத்ததற்கெல்லாம் 'செந்தில், செந்தில்' என்று அழைத்துக் கொண்டு என் எதிரில் வந்து நிற்பாள் செங்கமலம். ஒரு நிமிஷம் சண்டை போட்டுக் கொள்வோம், மறுநிமிஷம் சேர்ந்து கொள்வோம்.



செங்கமலத்தைக் காணுமென்றால், 'செந்தில் எங்கே?' என்று தேடுவார்கள். செந்திலைக் காணுமென்றால், 'செங்கமலம் எங்கே' என்று தேடுவார்கள். அவள் இருக்கும் இடத்தில் தான் இருப்பேன்; நான் இருக்கும் இடத்தில்தான் அவள் இருப்பாள்.

நானும் செங்கமலமும் சேர்ந்துதான் பள்ளிக்கூடம் போவோம்; சேர்ந்துதான் படிப்போம். வாய்க்காலுக்குக் கூட சேர்ந்து தான் குளிக்கப் போவோம்.

பெருமாள் கோவில் குளம் மிகப் பெரியது. அதில் தாமரைப் பூக்கள் நிறைந்திருக்கும். அதன் கரைதான் நானும் செங்கமலமும், சேர்ந்து விளையாடும் விளையாட்டுத் திடல். வீட்டிலிருந்து தின்பண்டங்கள் கொண்டுவந்து அங்கு வைத்துக் கொண்டுதான் தின்போம்.

செங்கமலம் என்றால் செங்கமலம்தான். அவ்வளவு அழகான முகம். துறுதுறுப்பான பார்வை. அவள் எந்தப் பாவாடை கட்டிக் கொண்டாலும் அந்தப் பாவாடைக்குத் தனி அழகு ஏற்பட்டு விடும். அவள் அழகுக்கு ஒரு கவர்ச்சி ஊட்டியதே நீண்டு அடர்த்தியாக வளர்ந்திருந்த எழில்மிகு கூந்தல்தான். அதை இரட்டைப் பின்னலாகப் போட்டுக் கொண்டு விண்ணிலிருந்து மண்ணுக்கு இறங்கி வந்த வெண்மதியைப் போல வளைய வருவாள். எதற்கெடுத்தாலும் 'கலகல'வென்று கைகொட்டி நகைக்கும் குழந்தைத் தன்மையான கள்ளமற்ற பார்வை; தாழம்பூவின் நிறம்; விசாலமான நயனங்கள்; நல்ல செழிப்பான வளர்ச்சி. இவைதான் செங்கமலத்தின் தனிச் சிறப்பு.





# எப்படி இருப்பாள்?

ஸோமாஸ்

**நா**ன் கிராமத்தை விட்டுச் சென்னைக்குப் புறப்பட்டபோது செங்கமலத்தை விட்டுப் பிரிய வேண்டுமே என்று எனக்குத் துயரம் தாங்க முடியாமல் பொங்கி வந்தது. என்னுள் இருந்து இடைவிடாமல் என்னைத் தூண்டிக் கொண்டிருந்த சென்னைக்குப் போகும் ஆசையைக்கூடத் துறக்கத் தயாராகிவிட்டேன். அப்புறம் அப்பா, அம்மா, மாமா எல்லாருமாகச் சேர்ந்து என்னைச் சமாதானப் படுத்திச் சென்னைக்கு அனுப்பி வைத்தார்கள். அப்பொழுது என் செங்கமலம் அழுத அழுகை சொல்லி முடியாது. வானத்துச் சந்திரனை அழுக்குப் படிந்த மெல்லிய முகில் திரை மறைப்பது போல் அவள் முகத்தை இந்தப் பிரிவுத் துயர் கலக்கமுறச் செய்துவிட்டது.

எட்டு ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. நான் இப்பொழுது திடகாத்திரமான வாலிபன். உள்ளமும் உடம்பும் வலிவடைந்து இளமையின் மெருகோடு வாலிபத்தின் மிறு மிறுப்பும் சேர்ந்து என்னிடம் ஒரு புதிய ஒளி உண்டாகி யிருந்ததை நான் உணராமல் இல்லை.

மாமா ஒரு தொழில் அதிபர். என் படிப்போடு அவர் தொழில் துறைக்கும் ஈடு கொடுக்க நேர்ந்ததில் எங்கள் ஊருக்கே போக முடியவில்லை. ஊருக்குப் போக வேண்டும் என்னும் ஆசையை இரண்டொரு தடவை இலேசாக மாமாவிடம் பிரஸ்தாபித்ததற்கே மாமாவுக்குக் கோபம் வந்து விட்டது.

''உன்கிட்ட நான் ரொம்ப எதிர்பார்க்கிறேன். அது தப்புன்னு தோணித்துன்னா நீ கிராமத்துக்குப் போ. அங்கே போய் உட்கார்ந்துண்டு என்னடா பண்ணப் போறே?'' என்று மிகவும் கோபமாகக் கடிந்து கொண்டார். நான் அதற்கு மேல் எதுவும் பேசவில்லை.

மாமா கடுமையான உழைப்பாளி. சதா அலுவலகத்தில் அமர்ந்து இராப் பகல் எந்நேரமும் வேலை செய்து கொண்டிருப்பார். அதே மாதிரி என்னிடமும் கடுமையாக வேலை வாங்கிவிடுவார்.

ஆனால் அவர் அந்த மாதிரி என்னிடம் கடுமையாக வேலை வாங்கினதால்தான் நான் இன்று ஒரு ஸ்தாபனத்தின் சின்ன முதலாளியாக இருப்பது சாத்தியமாயிருக்கிறது.

பட்டணத்து நாகரிகம் நிறைந்த இயந்திர வாழ்க்கையிலும் கூட எனக்குக் கிராமத்து நினைவு அடிக்கடி உண்டாகும். சலசலவென்று ஓடும் வாய்க்கால், அதன் கரையில் — சர்வ சாட்சியாக அல்லும் பகலும் அனவரதமும் மழை, வெய்யில், காற்று, பனி எதற்கும் அஞ்சாமல் வீற்றிருக்கும் கமுக விநாயகப் பெருமான் சந்நிதி; தாமரைக் குளம், அதன் கரையில் நானும் செங்கமலமும் கலகலவெனக் கவலையின்றிச் சிரித்து விளையாடிய சிறு பிராயம் ஆகியவை என் மனக் கண் முன் சதா தோன்றும். செங்கமலம் இப்பொழுது

எப்படி இருப்பாள்?' என்று நினைத்து அந்த நினைப்பிலேயே லயித்திருப்பேன்.

வண்டி எங்கள் வீட்டு வாசலை அடைந்து விட்டது. எங்கள் வீடும், பக்கத்து வீடும் பழைய மாதிரியேதான் இருந்தன. 'இப்பொழுது செங்கமலம் எப்படி இருப்பாள்!' என்ற எண்ணமே என் மனத்தைக் குடைந்து கொண்டிருந்தது. பக்கத்து வீட்டைப் பார்த்தேன். அந்த வீட்டு மாமாவும், மாமியும் ஓடிவந்து வரவேற்றனர். என் கண்களும், உள்ளமும் செங்கமலத்தைத் தேடின. அவள் என் கண்ணில் படவே இல்லை.

அம்மாவும், அப்பாவும் என்னை மிகவும் அன்பாக வரவேற்றார்கள். என் கம்பீரமான வளர்ச்சியைக் கண்டு அம்மா அயர்ந்துதான் போனாள். அவளுக்குப் பெருமை பிடிபட வில்லை. ஒருவாறு டிபன், காப்பி சாப்பிட்டு முடித்தேன்.

அம்மா என்னென்னவோ பேசிக் கொண்டே போனாள். அவள் பேச்சில் செங்கமலத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூட வர வில்லை.

என்னால் தாங்க முடியவில்லை. ''அம்மா, செங்கமலம் எங்கே அம்மா? ஊரில் இல்லையா? கண்ணில் படவேயில்லையே!'' என்று நாணுகக் கேட்டு விட்டேன்.

''உன் செங்கமலத்தை யாரும் தூக்கிக் கொண்டு போய்விட வில்லை. இங்கேதான் இருக்கிறாள்.'' என்று சர்வ சாதாரண மாகச் சொல்லிவிட்டு, ''நீ குளிக்க வாய்க் காலுக்குப் போக வேண்டாம். வெந்நீர் போட்டிருக்கிறேன். குளித்துச் சாப்பிட்டு விட்டுக் கொஞ்சம் இளைப்பாறு. ரயில் பிர யாணம் அலுப்பா யிருக்கும்'' என்று சொல் லிக்கொண்டே உள்ளே போய்விட்டாள்.

பிறகு நான் குளித்தது, சாப்பிட்டது எது வுமே என் மனத்தில் பதியவில்லை. பார்க்கும் பொருள்களிலெல்லாம் செங்கமலம்தான் தெரிந்தாள். அம்மாவிடம் செங்கமலத்தைப் பற்றி மறுபடியும் கேட்க ஏனோ எனக்குத் துணிவில்லை. இத்தனைக்கும் அவள் இருப்பது பக்கத்து வீடுதான். நானாகப் போய் அவளைப் பார்க்கவும் என் மனம் இடம் தரவில்லை. நான் ஊரிலிருந்து வந்து இத்தனை நேரம் ஆகியும் அவள் என்னை எட்டிக்கூடப் பார்க்க வில்லையே! எனக்கு மட்டும் என்னவாம்!

ஒருபுறம் இப்படி என் மனத்தில் தோன்றி னாலும் என் உள் மனம் ஓயாமல் அவளைத் தான் நினைத்துக் கொண்டிருந்தது. 'செங்க மலம் இப்பொழுது எப்படி இருப்பாள்!' என்ற எண்ணம் என் மனமெல்லாம் நிறைந் திருந்தது.

சாப்பிட்டுவிட்டுக் கொஞ்ச நேரம் ஓய் வாகப் படுத்தேன். என் உடம்புதான் படுத் ததே தவிர, என் உள்ளம் செங்கமலத்தையே சுற்றிக் கொண்டிருந்தது.

மாலையில் வெளியே புறப்பட்டேன். ஊர் பிரமாதமாக வளர்ந்திருந்தாலும் எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. மறுபடியும் சென் னைக்குப் போய்விட வேண்டும் என்று தோன் றியது. நானும் செங்கமலமும் வழக்கமாக வந்து விளையாடும் தாமரைக் குளத்தைப் பார்த்தேன். ஒரு மாறுதலும் இல்லை. அப் படியே இருந்தது. குளத்திலிருந்த தாமரை மொட்டுக்கள் மட்டும் கூம்பியிருந்தன. அவை எனக்குக் கைகூப்பி விடை யளிக் கின்றனவோ!

அதிக நேரம் அங்கே இருக்கப் பிடிக்காமல் வீட்டுக்கு வந்து விட்டேன். வீட்டிலும் நிம் மதியில்லை. நான் வேண்டாமென்று உதறித் தள்ளினாலும் அந்தக் கேள்வி என்னுள் எழுந்து கொண்டே இருந்தது. — 'செங்கமலம் இப்பொழுது எப்படி இருப்பாள்!'

இரவு முழுவதும் தூக்கம் இல்லாமல் தவித்து, கேட்ட கேள்வியையே மனத்தில் கேட்டுக் கொண்டு ஒரு முடிவுக்கு வந்தேன். ஒரு மாதம் கிராமத்தில் இருக்கப் போவதாக என் மாமாவிடம் சொல்லிவிட்டு வந்தேன். ஆனால் இங்கே எனக்கு இருப்புக் கொள்ள வில்லை. இன்னும் இரண்டு நாட்களில் சென் னைக்குப் புறப்பட்டு விடுவது என்று தீர் மானித்துக் கொண்டேன்.

அதிகாலையில் எழுந்து வெளியே புறப் பட்டுப் பெருமாள் கோவில் குளத்தங்கரை யருகே சென்றேன். நேற்று என்னைப் பார்த் துக் கரம் கூப்பி விடையளித்த தாமரை மொட்டுகள் இன்று இதழ் விரிந்து மலர்ந்து கதிரவன் ஒளியில் எழில் வடிவம் காட்டின.

'செங்கமலம் இப்பொழுது எப்படி இருப் பாள்?' என்ற கேள்வி என்னுள் எழுந்து என்னையும் அறியாமல் வாய் விட்டு வெளி வந்துவிட்டது.

''அதைக் கண்ணால் பார்த்துத்தான் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்று தேனி னும் இனிய குரல் என் பக்கத்திலேயே கேட் டது. திரும்பிப் பார்க்க மனம் வரவில்லை. ஒருவேளை இது கனவா யிருந்து அது கலைந்து விட்டால்...? கண்ணை மூடிக் கொண்டு குளத்தங்கரையில் அமர்ந்து விட்டேன்.

விகும்பல் ஒலி கேட்டது. சட்டென்று திரும் பினேன்.

யார் இவள்? என் செங்கமலமா? இவ்வளவு எழில் இவளுக்கு எங்கிருந்து வந்தது? பாவாடை, சட்டையும் இரட்டைப் பின்னலு மாக என்னோடு சதா அரட்டை அடித்த செங்கமலமா இவள்? ஆளுயரத்துக்கு என்னரு கில் உயிர் பெற்று வந்த கோவில் சிலையைப் போலிருந்த செங்கமலத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்தேன்.

''செங்கமலம்! ஏன் அழுகிறாய்? நேற்றுக் காலை ஊரிலிருந்து நான் வந்தது முதல் நீ என்னை எட்டிக்கூடப் பார்க்கவில்லை. உன் பேச்சுக் குரல்கூடக் கேட்கவில்லையே!''

''உங்களைச் சந்திக்க எனக்குப் பயமாக இருந்தது.''

''பயமா? எதற்கு? என்னிடம் என்ன பயம்?''

''உண்மையைச் சொல்லத்தான் தயக்கம், பயம் எல்லாம். ஆனால் என்றாவது ஒரு நாள் சொல்லித்தானே ஆகவேண்டும்?''

என் நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டது. 'வேண்டாம், செங்கமலம்! என் தலையில் பேரிடியைப் போடாதே' என்று கெஞ்ச வேண்டும் போலிருந்தது. ஆனால் வாய் திறந்தபோது ''சொல்லு'' என்ற வார்த் தையே வெளிவந்தது.

''ஊரிலே எல்லாரும் நம்மிருவருக்கும் முடிச்சுப் போட்டு வம்பளக்கிறார்கள். நம்

கார்ன் ப்ராடக்ட்ஸ் தேர்ந்தெடுத்த

# பரிசு-பெற்ற பக்குவமுறை

# செக்

(அனுப்பியவர் : மிஸ். அண்ட்ரியா




## ஜெல்லி கிரிஸ்டல்ஸ்

உபயோகித்துத் தயாரிக்கப்பட்டது



செழுமையில் சிறந்த இனிய பழச்சுவை உடையது **ரெக்ஸ் ஜெல்லி**–சிறுவர், முதியோர் ஆகிய யாவரும் விரும்புவார்கள். எல்லா சமயங்களுக்கும் ஏற்ற பல்வேறு வகையான புட்டிங்குகளையும் பழத் தின்பண்டங்களையும் தயாரிக்க உதவுகிறது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன பக்குவப்படுத்தப்பட்டதால், ஜெல்லி கிரிஸ்டல்களிலேயே மிகச்சிறந்தவை **ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்ஸ்.**




தேர்ந்தெடுக்க 6 இனிய சுவைகள்.

## பக்குவ முறை:

3 முழு டேபிள்ஸ்பூன் சைனா கிராஸ் (ஜெலிக் கிராஸ்), மென்மையாக வெட்டப்பட்டது

# டிலீஷியா

(...ட்ரேகோ, பாந்த்ரா, பம்பாய்-50)

1 பாட்டில் பால்
3 முழு டேபிள்ஸ்பூன் சர்க்கரை
1 பாக்கெட் **பிரவுன் & போல்சன்** வெனாட்டி கஸ்டர்டு-வனில்லா சுவையுடன்
3 முழு டேபிள்ஸ்பூன் ஆப்பிள்கள் -தோல் உரித்து, மென்மையாக வெட்டப்பட்டவை
6 முழு டேபிள்ஸ்பூன் துண்டமாக்கிய முந்திரிப் பருப்பு
3 முழு டேபிள்ஸ்பூன் துண்டமாக்கிய வால்னட் பருப்பு
1 பாக்கெட் **ரெக்ஸ்** ஜெல்லி கிரிஸ்டல்கள்-ராஸ்பெர்ரி சுவையுடன்
2 பாக்கெட் டேவிஸ் ஜெலட்டின்
1 வாழைப் பழம்-மென்மையாக வெட்டப்பட்டது
ஜாம் அல்லது முட்டையின் வெண்கரு
1 கோப்பை நுரைபொழக் கடைந்த, இனிப்பாக்கிய க்ரீம்
சில கிளாஸே செர்ரி பழங்கள்
சிறிதளவு ஏஞ்சலிகா (க்ரீன் ப்ளேவர்)

1. ஜெலி கிராஸை சில நிமிடங்கள் வரை ஊற வைக்-கவும். பின்னர் நீரை வடித்து விட்டு, அதைப் பாலோடு சேர்க்கவும். அதை சூடாக்கிக் கரைக்கவும். கொதிக்க வைக்காதீர்கள். அடுத்து சர்க்கரை கலந்து, நன்கு கரையும் வரை கிளறவும்.

2. **பிரவுன் & போல்சன்** வெனாட்டி கஸ்டர்டுடன் சிறிது குளிர்ந்த பாலை சேர்த்து மிருதுவான க்ரீம்போல் செய்துகொள்ளவும். இதையும், ஆப்பிள்கள், முந்திரிப் பருப்பு மற்றும் வால்னட்டுகளையும் பாலுடன் கலந்து, ஒரு நிமிடம் வரை நன்கு கிளறவும். அடுத்து 20 செ.மீ. x10 செ.மீ. அளவுள்ள ட்ரேயில் வெண்ணெய் தடவி, அதில் இந்த குளிர்ந்த கலவையை ஊற்றவும். பிறகு ட்ரேயை ரிப்ரிஜரேட்டரில் வைத்து, நன்றாகக் குளிரவைக்கவும்.

3. **ரெக்ஸ் ஜெல்லி** கிரிஸ்டல்களையும் ஜெலட்டினையும் 252 கிராம் வென்னீரில் கரைக்கவும். கலவையை அடுப்பின்மீது வைத்து, அது நன்றாகக் கரைந்ததும் வாழைப்பழத்தை சேர்க்கவும்.

4. 20 செ.மீ.x10 செ.மீ. ட்ரேயில் வெண்ணெய் தடவி (முதலில் பயன்படுத்திய ட்ரேயையே, அதிலுள்ளகலவை நன்கு படிந்து, அதை வேறு தட்டுக்கு மாற்றிய பிறகு, உபயோகிக்கலாம்), கலவையை ஊற்றவும். பிறகு ட்ரேயை ரிப்ரிஜரேட்டரில் குளிர வைக்கவும்.

5. படிந்ததும், ஜெல்லியையும் கஸ்டர்டையும் நீளவாட்-டில் துண்டுகளாக்கவும். (4 துண்டுகள்). ஒவ்வொரு துண்டத்தின் இரு பக்கங்களிலும் முட்டையின் வெண்கரு அல்லது ஜாமை பிரஷ்ஷால் தடவவும்.

6. 4 துண்டங்களையும்மாற்றி மாற்றிவைத்து, சாண்ட்விச் போல் செய்யவும். அதாவது ஒரு ஜெல்லி, ஒருகஸ்டர்டு, அதன்மீது ஒரு கஸ்டர்டு, ஒரு ஜெல்லி வைக்கவும் -கட்டம் போட்ட டிசைன் மாதிரி.

7. இரு பக்கங்களிலும் (நீளவாட்டில்) மேல் பக்கத்-திலும் பிரஷ்ஷால் ஜாம் தடவி, அதன்மீது நுரைபொழக் கடைந்த க்ரீமைத் தெளிக்கவும். பாதியாக்கப்பட்ட செர்ரி பழங்களையும், இலைகளைப்போல் தோன்றும்படி வெட்டப் பட்ட ஏஞ்சலிகாவையும் வைத்து அழகுபடுத்தவும்.

**வாசகர்கள் கவனிக்க:**
**எங்கள் பக்குவ முறைப் போட்டிக்குக் கிடைத்த அமோக ஆதரவு காரணமாக, தற்போதைய திட்டத்தில் பிப்ரவரி 1970-க்குப் பிறகு கிடைக்கப் பெறும் பக்குவமுறைகளைக் கவனிக்க முடியாததற்கு வருந்துகிறோம்.**

இலவசம்! புதிய பக்குவ முறை நூல் நெ. 2. இன்றே ஒரு பிரதிக்கு எழுதுங்கள்.

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவமுறை செட்டை ஆங்கிலம்/இந்தி/வங்காளி/தமிழ்/தெலுங்கு/மலையாளம்/குஜராத்தி/மராத்தி/கன்னடமொழியில் இலவசமாக அனுப்ப வேண்டுகிறேன்.

பெயர் ..............................

முகவரி ..............................

..............................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக :
பப்ளிஸிடி டிபார்ட்மெண்ட்,
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி,
(இந்தியா) பிரை. லிட்.
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு,
பம்பாய்-1. (பி.ஆர்).
K-10

இதுபோல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின்வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்.

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்—1. (பி ஆர்).
ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், சென்னை-1. மற்றும் அவர்களது கிளைகள்.

Everest/4460 TM

இருவரது குடும்பத்தினரும் கூட அப்படித் தான் பேசுகிறார்கள்... ஆனால்...''

''ஆனால்... உனக்கு இந்தத் திருமணத்தில் சம்மதமில்லை; அப்படித்தானே?''

''என்னை மன்னித்துவிடுங்கள்....''

''மன்னிப்புக்கு என்ன இருக்கிறது செங்கமலம்? ஏதோ சிறு பிள்ளையாக இருந்தபோது விளையாடிக் கொண்டிருந்ததை வைத்து ஊரார் தப்புக் கணக்குப் போட்டால் நாம் என்ன செய்ய முடியும்?''

அவள் என்னை ஆச்சரியத்துடன் பார்த்தாள். ''நீங்கள் இந்த விஷயத்தை இத்தனை சுலபமாக எடுத்துக் கொள்வீர்கள் என்று நான் நினைக்கவில்லை'' என்றாள்.

நான் சிரித்தேன். ''செங்கமலம், விஷயம் இவ்வளவு சுலபமாக முடிந்து போகும் என்று நானும் நினைக்கவில்லை. உண்மையில் நீ இப்படிச் சொன்னது எனக்கு எவ்வளவு நிம்மதியாக இருக்கிறது தெரியுமா? நான் சென்னையில் என்னோடு காரியாலயத்தில் வேலை பார்க்கும் ஒரு பெண்ணைக் காதலிக்கிறேன். அதை உன்னிடம் எப்படிச் சொல்வது என்று புரியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டேதான் இந்த இரண்டு நாட்களை ஓட்டியிருக்கிறேன். இல்லாவிட்டால் வந்ததும் வராததுமாக நீ எங்கே இருந்தாலும் உன்னைத் தேடிப் பிடித்து வந்து பார்த்திருக்க மாட்டேனா நான்?''

''அப்பாடி!'' என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டாள் அவள்.

''உன் மனத்தைக் கவர்ந்தவன் யார் சொல்லு செங்கமலம். நான் உன் பெற்றோரிடம் பேசிக் கல்யாண ஏற்பாடுகளைச் செய்கிறேன்.''

''நிஜமாகவா? எனக்காக இதை நீங்கள் செய்வீர்களா?''

''உனக்காக இல்லை செங்கமலம். எனக்காக! உன் திருமணம் நடந்தேறிய பிறகு தானே நான் நிம்மதியாக என் சித்திராவின் கழுத்தில் தாலி கட்ட முடியும்?''

அவளுடைய மன நிம்மதிக்காக முக மலர்ச்சியுடன் துணிந்து பொய் பேசினேன். சித்திரா யார்? அப்படி ஒருத்தி இருந்தால் தானே அவளைப் பற்றி நான் ஏதாவது இங்கு சொல்ல முடியும்?

செங்கமலம் ஒரே உற்சாகத்தோடு தன் இதயம் கவர்ந்தவனைப்பற்றிக்கூற ஆரம்பித்தாள்.

குளத்தில் கரையோரமாக இருந்த ஒரு செங்கமலத்தைப் பறித்துக் கசக்கி உருத் தெரியாமல் அழித்துக் கொண்டிருந்தன என் கரங்கள்.

என் மனமும் அதே காரியத்தைத்தான் செய்து கொண்டிருந்தது. ஒரே ஒரு வித்தியாசம்: கரம் வெற்றி பெற்றது; மனம் தோல்வி கண்டு அழுதது.

# படித்துப் பாருங்கள்

## ஸ்ரீ கிருஷ்ண கர்ணம்ருத ரசாயனம்

கண்ணன் அன்புக்கும் கவிதை இன்பத்துக்கும் ஓர் ஒப்புயர்வற்ற நூல், லீலாசுகரின் ''கிருஷ்ண கர்ணம்ருதம்''. அதிலிருந்து நூற்றெட்டு நன்மலர் செய்யுட்களைத் தேர்ந்தெடுத்து, ரசிக உணர்வுடனும், இறைப் பற்றுடனும் தெள்ளிய பழகு தமிழில் இங்கு விளக்கம் தருகிறார் ஆசிரியை. காஞ்சி ஆசாரியாள், சிருங்கேரி ஆசாரியாள் இருவர் ஆசியும் பெற்றுள்ள இந்நூலுக்குத் தலைவர் ராஜாஜி வழங்கியுள்ள வாழ்த்துரையில், ''இந்நூல் சிறந்த பக்திப் பண்டம்... தெய்வத்தில் தம் உள்ளம் முழுமையும் செலுத்தி இந்த நூலை எழுதித் தந்த அம்மையாருக்கு நாம் அனைவரும் கடமைப்பட்டிருக்கிறோம்'' என்று கூறியிருப்பதற்கு அதிகமாக நாம் சொல்ல என்ன இருக்கிறது?

ஆசிரியை: (ஹரிணி) விசாலாக்ஷி அம்மாள் கிடைக்குமிடம்: விசாலாக்ஷி அம்மாள், ஸ்ரீ ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம், திருமுல்லைவாயில், சென்னை—62.

## பூனைக்கு மணி கட்டியது யார்?

'பூனைக்கு மணி கட்டுவது யார்?' என்ற பிரச்னையைக் கொண்ட கதையைப் பற்றி நமக்கெல்லாம் தெரியும். நம் குழந்தைகளுக்கும் அதை வழி வழியாகச் சொல்லி மகிழச் செய்து வந்திருக்கிறோம். மிகவும் பிரபலமான இந்த எலிக் கதையைப் புதிய பாணியில் 'பூனைக்கு மணி கட்டியது யார்?' என்ற தலைப்பில் திரு டி. வி. ஜான் அவர்கள் எழுதி யிருக்கிறார். குழந்தைகளுக்கான ஒரு குட்டிக் கதை. எலிகள் பூனைக்கு மணியைக் கட்டியே விடுகின்றன. எப்படி? அதுதான் இந்தக் குட்டிக் கதையின் 'சஸ்பென்ஸ்'. கண்ணைக் கவரும் வண்ணங்களில் அழகான படங்கள். குழந்தைகள் பார்த்துப் படித்து மகிழ ஏற்ற நூல்.

ஆசிரியர்: டி. வி. ஜான்; வெளியீடு: கிறிஸ்துவ இலக்கியச் சங்கம்; சென்னை 3; விலை: 1-25.

## பிரிட்டன் 1970

பிரிட்டனுக்குச் செல்ல நினைப்போருக்கு அனுமதி வழங்கும் விஷயத்தில் அந்நாட்டு அரசின் கெடுபிடி சமீப காலத்தில் மிகவும் அதிகமாகி யிருக்கிறது. குறிப்பாக ஆசிய நாடுகள் பலவற்றிலிருந்து அங்கு செல்வோர் அங்கேயே நிரந்தரமாகத் தங்கிவிட நினைக்கிறார்கள் என்பதால் மிகவும் கண்டிப்பாக இருக்கிறது பிரிட்டிஷ் அரசு. எனினும் தகுந்த காரண காரியங்களுடன் பிரிட்டன் செல்ல நினைப்போருக்குத் தடை ஏதும் இல்லை. அப்படிப் போகும் வாய்ப்புக் கிட்டியவர்களுக்கும் சரி, மற்றும் பிரிட்டனைப் பற்றிய விவரங்கள் அறிய விரும்புவோருக்கும் சரி, ''பிரிட்டன் 1970'' என்ற இந்தப் புத்தகம் மிகவும் உபயோகமாக இருக்கும். பிரிட்டனைப் பற்றி சகலமான விவரங்களையும் சுருக்கமாகத் தரும் இந்த ஆங்கிலப் புத்தகம் அந்நாட்டைப் பற்றி என்ன சந்தேகம் ஏற்பட்டாலும் தீர்க்கவல்லது. அதற்கு வசதியாக அட்டவணை தரப்பட்டுள்ளது.

Britain 1970 - Available from HMSO Sales Section British High Commission, chanakyapuri, New Delhi-11- விலை ரூ. 29-25.

# கவிக் காவேரி!

தமிழழகன்

பொங்கு பொங்கெனப்
பொங்குவாள்!
பூ விரியத் தங்குவாள்!
எங்கும் எங்கும் இன்பமாய்
எக்க ளிக்க முங்குவாள்!

நுரைநு ரையாய்ச் சாடுவாள்!
நூபு ரங்கள் சூடுவாள்!
மறையின் நுட்பப் பொருளெலாம்
மயக்கம் தீரப் பாடுவாள்!

பூவும் பொன்னும் சிந்துவாள்!
புதுவெள் ளத்தில் முந்துவாள்!
'வாழ்வும் வளமும் தான்!' என
வாசல் மனையில் குந்துவாள்!

வயல் வரப்பில் பாய்குவாள்!
வள மதகில் சாய்குவாள்!
கயல் பரப்பிக் கண்களின்
கலை பரப்பி மேய்குவாள்!

திரையில் துள்ளிப் பேசுவாள்!
தென்றல் அள்ளி வீசுவாள்!
கரையில் ஆடும் காதலர்
கன்னம் ஏதோ பேசுவாள்!

ஆற்று விழாக் கட்டுவாள்!
அருவி விழாக் கொட்டுவாள்!
காற்று வரிக் குழலிலே!
கானல் வரி தட்டுவாள்!

கரை கொழிக்க ஓடுவாள்!
கலம் செழிக்க நாடுவாள்!
உரை கொழிக்கும் காவிரி
உலகெலாம் கொண் டாடுவாள்!









டாக்டர் வி. கணேசன் (இருதய நோய் நிபுணர், சென்னை பொது மருத்துவ மனை) அவர்களின் புதல்வி செல்வி நளினியின் பரதநாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் சென்னை மியூஸியம் தியேட்டரில் சென்னை நீதிபதி கனம் ஏ. அழகிரிசாமி அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. தில்லானா, சிவசக்தி நடனம், மீரா பஜன் நடனமும் சிறப்பாக அமைந்தன. பல பிரமுகர்கள் வந்திருந்து ஆசிர்வதித்தனர்.

## திருமணம்



"மெயில்" பத்திரிகையைச் சார்ந்த திரு வி. பி. வி. ராஜனின் திருக்குமாரரும், சென்னை ஹிந்துஸ்தான் தாம்சன் விளம்பர நிறுவனத்தின் ஸ்டுடியோ மானேஜருமான சிரஞ்சீவி கிருஷ்ணமணிக்கும், சௌபாக்கியவதி லக்ஷ்மிக்கும் சமீபத்தில் திருமணம் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது.



# மார்க்கண்டன் வயது

## பூவை. எஸ். ஆறுமுகம்

உந்திக் கமலத்தில் விழுந்த அடிகளைத் துடிதுடித்துப்போய் விட்டாள் கமலம். மேலக்கோடியிலிருந்து மிதந்து வந்த அந்தத் தாலாட்டுப் பாட்டின் அடிகள் தாம் அவளை அவ்வாறு நிலைகலங்கச் செய்துவிட்டன. உருட்டிய கலயம் உருண்டு விழுந்தது. 'ஐயையோ! மகனே! ராமையா!' என்று வாய்விட்டுப் புலம்பினாள்; மனம் விட்டுக் கதறினாள். பெற்ற வயிறு பொங்கிப் புரண்டது.

கமலம் வாசலையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள். கண்ணீர் வெள்ளம் மடை திறந்தது. 'அந்நாலே பள்ளிக்கூடம் விட்டு, பிள்ளைங்க எல்லாம் திரும்பிக்கிட்டிருக்குதுகளே! இந்நேரத்துக்கு நீயும் திரும்பிடுவியே? வந்தடியும், 'அம்மா, வாய் இளைக்க வருது. ஏதாச்சும் திங்கிறதுக்குக் கொடு' ன்னு சொல்லுவியே?...துளி நாழி ஆயிட்டாக்கூடக் கோபம் வந்துடுமே ஒனக்கு? ரோசக்காரப் பிள்ளையாச்சே நீ? தங்கமே, ராமையா! ஐயோ தெய்வமே!...'

கமலத்துக்கு ஓரிடத்தில் இருப்புக் கொள்ளவில்லை. கபாலம் வெடித்துச் சிதறி விடும் போலிருந்தது. நெஞ்சம் மருக்கொண்டு தவித்தது. பெற்ற வயிறு வெந்து துவண்டது. பாசம் அத் தாயுள்ளத்தை அலங்க மலங்கச் செய்தது. அவள் பார்வை இன்னமும் வாசல் வெளியிலேயே கட்டுண்டிருந்தது. ஏன் அப்படி ஆசை மூளப் பார்க்கிறாள் கமலம்? — ராமையா திரும்பி வருவான் என்ற ஆவலா?— மகன் திரும்பிவிடுவான் என்ற சபலமா?

மஞ்சள் வெய்யில்.

அதோ, மாணிக்கம்! தெருவில் மடங்கி, ''அம்மா!'' என்று கன்றின் குரலாக விளித்துக் கொண்டு, புத்தகமும் கையுமாக ஓடி வந்த அந்தச் சிறுவன் சித்தப்பா வீட்டைத் திசைப்போடு பார்த்த வண்ணம் தன் வீட்டுக்குள் நுழைந்து விட்டான்.

கமலம் நீர்த் திரை விரிந்த தன் பார்வையைத் திருப்பினாள். சிறுவன் மாணிக்கம் அவளது மனக் கண்ணினின்றும் ஓடவில்லை. அவளையும் மீறிய விதத்தில், அவளுடைய பற்கள் 'நறநற' வென்றன. 'பாவி மகன்!' ஆத்திரம் பொங்கியது. இமைப் பொழுதுக்குக் கண் இமைகளை மூடிக் கொண்டாள். 'மாணிக்கம் பந்தயம் கட்டலேன்னா, ராமையாவுக்கு இக்கதி வந்திருக்குமா?...' மீண்டும் கண்களைத் திறந்து மூடினாள்.

'மாணிக்கத்தை நொந்து கொண்டு என்ன புண்ணியம்? விதி அவன் ரூபத்தில் விளையாடிட்டு அடங்கிடுச்சு போலே!... தெய்வமே, எப்படி நாங்க உயிர் தரிக்கப் போறோம்?...' மூக்கைச் சிந்திக் கொண்டே பின்கட்டுக்கு நடந்தாள்.

அந்தி சாய்ந்தது.

சிறிய சைக்கிளில் மாணிக்கம் பம்பரமாய்ச் சுற்றினான். பெரிய வாசல். இரண்டு மனைகளுக்கும் பொதுவான வெளி. சுற்றக் கேட்பானேன்?

சிறுவன் மாணிக்கம் எவ்வளவு அழகாக ஓட்டுகிறான்!

பெருங் கல்லொன்று கொன்றை மரத்தையொட்டிக் கிடந்திருக்கிறது. அதன்மீது துவிச்சக்கர வண்டி ஏறிவிட்டது. குப்புறச் சாய்ந்து விட்டான் பையன். நெற்றி புடைத்தது. தடவி விட்டுக் கொண்டே எழுந்தான். எழுந்தவுடன் அவன் பார்வை பக்கத்து வீட்டை நோக்கிச் சாய்ந்தது.

தாழ்வாரத் தூணில் சாய்ந்தபடி சோகமே உயிராக இயக்கம் கொண்டு நின்றிருந்தாள் கமலம்.

அவள் முகத்தைக் கண்டதும், மாணிக்கத்தின் முகம் சிறுத்துக் கறுத்தது. அந்தப் பிஞ்சு முகத்திலும் சோக நிழல் பரவத் தலைப்பட்டது.

''அம்மா! விழுந்திட்டேம்மா!'' என்று செல்லமாகத் தெரிவித்தான் பிள்ளை.

''இந்தச் சைக்கிள் சனியன் ஒன்னைத் தள்ளிப்பிடுச்சாடா, தங்கம்?'' — புடைத்த இடத்தைத் தடவிக் கொடுத்தாள் தாயார்.

''அது தள்ளலே. அது தள்ளுமாக்கும்? பொய் சொல்றே நீ! நான்தான் விழுந்திட்டேன். அதுகூடச் சரியில்லே. அந்தாக் கிடக்குது பாரும்மா ஒரு செம்புறுங்கல்லு. அது தாம்மா என் சைக்கிளைக் காலே வாரி விட்டுப்பிடுச்சு!'' என்று நடப்பை விளக்கினான், மாணிக்கம்.

''அப்படியா?'' என்று சேலை முந்தானையை வரிந்து கட்டிக் கொண்டு, கோபத்தையும் கட்டிக் கொண்டு நடந்து, அந்தக் கல்லை எடுத்து வீசி எறிந்தாள்.

கல், கல்லாகவே இருந்தது!

மாணிக்கம் வாய் குலுங்கச் சிரித்தான்.

தாயாருக்கு ஒன்றும் விளங்கவில்லை. ''எந் தங்கம் பொய்யே பேசாது!'' என்று பெருமை கனியச் சொல்லி, மகனுக்குத் திருஷ்டி கழித்து, விரல்களைச் சொடுக்கி, 'நெட்டி' பறித்தாள்.

அன்னையையே பார்த்துக் கொண்டிருந்தான் மாணிக்கம். ''நான் ஏம்மா பொய் பேசப் போறேன்? பொய் பேசறது பாவம்னு ஏட்டிலே சொல்லி யிருக்குது. அதைச் சொல்லிக் கொடுக்கிற வாத்தியார் ஐயாவும் சொல்றாங்க. பொய் சொல்லவேபடாதாம். நீகூடப் பொய் சொல்லாதேம்மா!'' என்று கூறினான்.

''எங்கண்ணே! எழுதிக் கிடக்கணும்டா நீ!'' என்று பரவசத்துடன் சொல்லி, அருமை மைந்தனை அழைத்துக் காதோடு காதாக, ''மாணிக்கம், பக்கத்து வீட்டுக்காரி கண்ணிலே படுறப்பிலே இத்தனை சமர்த்தா நடந்துக்காதேப்பா. பெத்த மகனைப் பறி கொடுத்துப்பிட்டு ஏக்கமெடுத்து நிக்கிற மூதேவியப்பா அவள்!'' என்று கெஞ்சினாள்.

''பாவம், சின்னம்மாவை அப்படியெல்லாம் ஏசாதேம்மா'' என்று சிறு விழிகளை உருட்டிக் கெஞ்சினான் பிள்ளை. ''நீ போம்மா. நான் சைக்கிளை ஓட்டிப்பிட்டு வாரேன்.''

அந்த முக தரிசனம் அந்தச் சின்னஞ் சிறு விழிகளிலே அச்சமயம் படவில்லை!

விம்மலுக்கு உரு இல்லைதானோ?

**''யா**ரது வூட்டிலே?... கமலம்!''

''யாரு, நில்லுங்க, வாரேன்!'' எரிந்து கொண்டிருந்த உள்ளம் எரிந்து கொண்டிருந்த அரிக்கேன் விளக்கை ஏந்தி வந்தது.

''ஆச்சியா?... வாங்க...''

''ஆமா, தேவரய்யா ஆடுதுறையிலே தானா?''

''ஆமாங்க. மூணும் மாசம் வந்திட்டுப் போனாங்க. சித்திரை பிறந்து, என்னை அழைச்சிட்டுப் போவாங்க'' என்றாள் கமலம். தளர முடிந்திருந்த கொண்டை அவிழ்ந்தது.

''காப்பித் தூள் வியாபாரம் நல்லா நடக்குதில்லே?''

''கடவுள் புண்ணியத்திலே ஏதோ நடக்குதுங்க.''

''நீ இப்ப சொன்னே பாரு, கடவுள் புண்ணியம்னு. அதுதான் நம்பளைக் காப்பாத்த வல்லது. எம்புத்திக்குப் பட்டது இது. உன்னோட கஷ்டமும் தெளிஞ்சிடும். உன்னோட பாசத்துக்குக் காளி ஆத்தா கட்டாயம் கண் திறப்பா, கமலம். நேத்திப் பொண்ணு நீ!''

உணர்ச்சி வசப்பட்டாள் கமலம். சோகப் புன்னகை அவளுடைய வெளுத்த உதடுகளில் ஊடாடியது.

''நான் போறேன்.''

.........

பாசமும் சோகமும்தான் தெய்வத்துக்குக் கைவந்த சோதனைகளோ?

வீடு வெறிச்சோடிக் கிடக்கிறது.

தெய்வம் இல்லாத கோவில். கல் இல்லாத ஆலயம்.

தெய்வத்துக்குக் கல்லாக இருந்துவிடத் தெரிகிறது.

ஆனால் கமலத்துக்கு அந்த விதி பாடமில்லை. கரைந்து கரைந்து உருகினாள். உருகி உருகித் தவித்தாள். தரை மீனின் நிலை. தரை மீனின் விதி; தரை மீனின் பதைபதைப்பு!

'ராமையா!...'

கண்ணீரைத் துடைத்துக் கொள்ளவில்லை கமலம்.

'ராமையா!...'

இந்த ஐப்பசியில் நடந்த அம்மன் திருநாளுக்குப் பொங்கல் வைத்துக் கொண்டாட ஆடுதுறையிலிருந்து ஊருக்கு வந்தார்கள். பொங்கல் வைத்தார்கள். மாணிக்கத்துக்கு முடி இறக்கினது போலவே ராமையாவுக்கும் முடி எடுத்தார்கள். ஆனால் தெய்வம் என்னும் ஒரு சக்திதான் — தெய்வம் என்கிற அந்தச் சக்திதான் இரக்கப்பட மறுத்துவிட்டது. இல்லையென்றால், மூன்றாம் நாள் இளங் காலைப் போதிலே, அம்மன் குளத்துக்குக் குளித்து வரச் சென்ற பிள்ளை அந்தக் குளத்தையே விதியாகக் கொண்டு விடுவானா?— விதியாக்கிக் கொண்டு விடுவானா?...

எமன் மாயக்காரன்! குளத்தை ஏவிவிட்டிருக்கிறான்!— தர்மராஜனும்...தர்மராஜன்!...

குளிக்கப் போன அன்பு மைந்தனைக் காணோமேயென்று வேர்க்க விறுவிறுக்கக் குளத்துக்கு

# இதோ மிக
# வலிமையான
# டயர்!



## நாங்கள் இந்த டயரை 305 மீட்டர்கள் உயரத்திலிருந்து கீழுக்கு போட்டோம்...பிறகு அதை ஓட்டிப் பார்த்தோம்

இந்த சோதனை பயர்ஸ்டோனின் மூன்று விதங்களில் வலிமையூட்டும் தனிப்பட்ட செய்முறையின் சிறப்பை நிரூபித்தது.

நாங்கள் ஒரு பிரத்யேக முறையில்
டிரெட்டை டயருடன் பாண்ட் செய்கிறோம்,
பக்கவாடுகளை பலப்படுத்துகிறோம், கார்டுகளை
இன்ஸுலேட் செய்கிறோம்.

**மிக வலிமையான டயரை வாங்குங்கள்!**



நீங்கள் அளிக்கும் பணத்திற்கு அதிக கிலோ மீட்டர்கள் ஓட்டம். நீங்கள் அளிக்கும் பணத்திற்கு அதிக பாதுகாப்பு

40
வருடங்களாக
இந்தியாவுக்கு
சேவை

## பயர்ஸ்டோன்

நாடெங்கிலும் விற்கப்படுகிறது—இன்றே
உங்களுக்கருகில் உள்ள
பயர்ஸ்டோன் டீலரைப் பாருங்கள்

F-1025 A

ஓடினாள். கரைகளில் தேடினாள். கடைகண்ணி களைத் தேடினாள். பெற்ற மனம் அடித்துக் கொண்டது. எங்கெல்லாமோ தேடினாள்.

ராமையாவுடன் கூடச் சென்ற மாணிக்கம் தயங்கியவனாகக் குளித்துத் திரும்பி வந்து கொண்டிருந்தான். விசாரித்தாள் கமலம். ''குளத்திலே எல்லாப் பிள்ளைகளோடநாங் தம்பி விளையாடிக்கிட்டிருந்திச்சு அண்ணன். கொஞ்சம் கழிச்சுப் பார்த்தோம் காணலே!'' என்று கண் கலங்கச் செப்பினான் சிறுவன் மாணிக்கம்.

அறந்தாங்கிச் சந்தைக்குப் போயிருந்த பெரியசாமி தன் அருமைத் திருமகனுக் கென்று ரொட்டி, முறுக்கெல்லாம் பை நிரம்ப வாங்கிக் கொண்டு வந்து, மகனைத் தேடினான். கடைசியில், ராமையா கிடைத்துவிட்டான்! நடுக் குளத்தில் ஒளிந்திருந்த மடு ஒன்றில் ஒளிந்து கொண்டிருந்தான் பையன்! விதிக்கு ஏய்ப்புக் காட்டத்தான் அவ்வாறு ஒளிந்து கொண்டிருந்தானோ, என்னவோ?

ஒளிந்து விளையாட மடுதான் கிடைத்ததா?

ஊர் கூடியது.

நியாயம் கேட்கவா?

யாரிடம், விதியிடமா?

சிறுமி பங்கஜம் புதுக் கதை சொன்னாள்: ''ஒங்க கொழுந்தன் மகன் மாணிக்கம்தான் ஒங்க ராமையாவை மடுவிலே தள்ளிப்பிட் டான்!''

கூட்டம் நெரிந்தது.

விதியை நெரிக்கவா?

இல்லே, அந்தச் சிறுவன் மாணிக்...?

ரத்த பாசம் பிரித்துவிட்ட அந்த இரு வீடு களும் குருக்ஷேத்திரம் ஆயின. அதுதான் மிச்சம். ராமையாவின் ஜீவன் மிஞ்சவில்லே!

''அண்ணனை நான் தள்ள ஒப்புவேனா?... காளி ஆத்தா ஆணையா நான் அப்படிச் செய் யவே இல்லே. 'குளத்து மையத்துக்குப் போயிட்டுத் திரும்பினா ஒருருவான்னு பந்தயம் கட்டினேன் அண்ணன்கிட்டே. அண்ணன் அந்த இடத்துக்கு நீச்சலடிச்சுப் போச்சு. ரொம்ப ரோசக்கார அண்ணனுச்சே!...ம்... ஆனா, அப்பாலேதான் அதைக் காணலே!... இந்தாலே வச்சிருக்கேன் பந்தயம் கட்டின ஒரு ரூபாய்!'' என்று கதறினான் சிறுவன் மாணிக்கம். ''அண்ணே!... அண்ணே!...''

ராமையாவைப் பெற்றவர்கள் 'குய்யோ முறையோ' வென்று உயிர் ஒடுங்கப் புலம் பினார்கள்; வயிற்றில் அடித்துக்கொண்டு கதறினார்கள்; மண்டையை மோதிக்கொண்டு கூவினார்கள்.

தெய்வம், தெய்வமாகவே இருந்தது.

விதி விதியாகவே இருந்தது.

ஆனால் ராமையா மட்டிலும், ராமையா வாக இருக்கவில்லை!

ஆடுதுறையிலிருந்து 'கடுதாசி' ஒன்று வந்திருந்தது.

ராமையா மாதிரியா கமலத்துக்குப் படிக்க வரும்? 'என்னைக் காட்டிலும் என் மகன் தெரவுசாப் படிச்சாக்க, அது பெத்தவளுக் குத்தானே பெருமை?... இப்ப நாம்ப அவனை நல்லாப் படிக்க ஆளாக்கிப்பிட்டாக்க, அப்பாலே ஒங்க காலத்துக்குப் பின்னாலே, அவன் என்னை வச்சுக் காப்பாத்த மாட்டானா மச்சான்?' என்பாள் கமலம்.

கமலத்தின் நெஞ்சம் ஏக்கப் பெருமூச்சை நெட்டித் தள்ளிக் கொண்டிருந்தது. முந்தா நாள் அந்தி வேளையில் மாணிக்கம் தன் தாயா ரிடம் சொல்லிக் கொண்டிருந்த வார்த் தைகள் நினைவில் ஓடின. 'நான் எம்மா பொய் பேசப் போறேன்? நீகூடப் பொய் சொல்லாதேம்மா!' திரும்பத் திரும்ப, திருப் பித் திருப்பி, அச் சொற்கள் அவள் நெஞ் சத்தைச் சக்கர வியூகம் அமைத்துச் சுற்றின. எதையோ எண்ணினாள். ஏதோ நினைவு வந் தது. 'அப்படின்னா, மாணிக்கம் சத்தியம் செஞ்சு சொன்னப்பிலே, அவன் எங்க ராமை யாவைக் குளத்திலே அமுத்தித் தள்ளலேயா? பங்கஜம் குட்டி சொன்னது பொய்யா?' மனமும் மனச்சாட்சியுமாக வழக்கம்போல் போராடினாள். கண்ணீரும் பொருமலும், பாசப் பெருக்கும், பாசத் தவிப்பும் போரா டின. 'அடியே! ஒன்னோட வினை ஒன்னோட பிள்ளையை முழுங்கிட்டதுக்கு, மத்தவங்களை ஏண்டி மல்லுக்கு இழுத்துப் போறே?' என்று நிர்த்தாட்சிண்யமான எரிச்சலுடன் ஏசிய காமாட்சியின் சுடு சொற்களைக் கமலம் எங்ஙனம் மறப்பாள்? 'அடி, பாவி!....நான் மனசறிஞ்சு ஒரு தீவினையும் செய்யலியே? நீங்கதானே எங்களுக்குப் பாகம் சேர வேண் டிய முந்நூத்திச் சொச்சம் குழிப் புஞ்சையை ஏய்ச்சுப் பறிச்சுக்கிட்டீங்க? கஷ்டம் எல்லா ருக்கும்தானே பொது?...ஒனக்கு முந்தி நான் பெத்துக்கிட்டேனேன்னு அந்த நாளையிலே என்னைக் கொஞ்சமாவா கரிச்சுக்கொட்டினே? ஒம்மகன் பந்தயம் வைக்கப் போயித்தானே எம் மகன் செத்துச் சிவலோகம் போயிட் டான்?... அதுக்காக, ஒம்மகனைப் பத்தி ஒரு கெட்ட எண்ணம் நினைச்சதுண்டா நான்? கைக்குள்ளார ஒரு மகனை வைச்சுக்கிட்டு இருக்கிற நீ, சாமிக்குக்கூடப் பயப்படாம, எப்பிடி அடாவடியா முந்தாநாள் என்னை ஏசிப்புட்டே?... ஐயையோ!... ராமையா! ஏச்சுக் கடனுக்கும் ஜனப் பழிக்கும் உன் அம்மாவை ஆளாக்கி வச்சுப்பிட்டு, நீ போயிட்டியேடா, ராமையா!...'

வயிற்றை என்னவோ செய்தது. நிலந் தெளிய, ஒரு குவளை காப்பி குடித்தான். அவ்வளவுதான்!

அடுப்பங்கரையில் பூனை செங்கோலோச்சிக் கொண்டிருக்கிறது!

செல்லரித்துவிட்ட ராமையாவின் பழைய புகைப்படம் தாயின் கண்ணீர்க் காணிக் கையை ஏற்றது. குழந்தை எவ்வளவு அழ காகச் சிரிக்கிறான்!

வந்திருந்த கடிதத்தை எடுத்தாள்.

''....ராமையா கட்டாயம் திரும்பி வந்து நம் வீட்டிலே பிறப்பான். என்னை நம்பு. தெய்வத்தை நம்பிச் சொல்கிற பேச்சு. தெய் வத்தை நம்ப வேண்டியவர்கள் நாம்; நம்பக் கடமைப்பட்டவர்கள் நாம். சுகதுக்கம் சுழல் சக்கரம். நீ தைரியமாக இரு. இதயம் கொண்டவள் காளி அம்மன். நம் பேரிலே இரக்கப்படுவாள். மற்றவை நேரில்! காளி யம்மன் துணை!....''

தாலாட்டுப் பாட்டு மறுபடியும் காற்றில் மிதந்து வந்தது; அடங்கியது.

கமலத்தின் மேனி சிலிர்த்தது; மெய்ம் மறந்தாள் :

உணர்வுகள் விழிப்புக் கொண்டன.

மேலக்கோடி வீட்டு அஞ்சலை மதலையும் கையுமாக வந்து நின்றாள். சரக்குச் சாமான் 'கைமாற்று' வாங்க வந்திருக்கலாம்.

இருந்திருந்தாற்போல், கமலம் 'வாந்தி' எடுத்தாள்.

கமலத்தின் கையைப் பிடித்துப் பார்த்தாள் அஞ்சலை. ''அக்கா, ராமையாவே திரும்பி வந்து பிறந்திடுவான் !'' என்று நிறைந்த சிரிப்புடன் நல்வாக்குக் கொடுத்தாள்.

'ராமையா!...

இரணிய வேளை.

பக்கத்து மனையில் நெல் மூட்டைகள் வந்து இறங்கிக் கொண்டிருந்தன.

கமலம் பாயும் படுக்கையுமாக சதமானாள்.

திடீரென்று ஏதோ அரவம் கேட்டு, அரவம் கண்டாற்போன்று, திடுக்கிட்டு எழுந்தாள்.

''ஐயையோ!... மாணிக்கம்!... எந்த மூதேவி கரிக்கக் கொட்டினாளோ, அவ வீடு விளங்காமப் போயிட!... அழகாத்தானே சோறு துண்ணுட்டுப் பள்ளிக்கூடம் போனே! அதுக்குள்ளவா உனக்கின்னு இப்படி ஆபத்து வந்திடுச்சு ?.... எம் மவனே ! எங் கண்ணே !''

சுருக்கென்றது. வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள் கமலம். கண்களில் குபுக்கென்று கண்ணீர் சரப்பெடுத்தது. 'மாணிக்கம் !' 'சின்னம்மா, சின்னம்மா' என்று உயிரையே பாசமாக வைத்துப் பேசிப் புழங்கினவன் அல்லவா சிறுவன் மாணிக்கம் ?

பள்ளிக்கூடத்தின் அருகில் கட்டப்பட்டுக் கொண்டிருந்த மனைக்காக வெள்ளைக் கல் ஏற்றி வந்த லாரி, மாணிக்கத்தை — சடுகுடு விளையாடிக் கொண்டிருந்த மாணிக்கத்தை— அநியாயமாக மோதிச் சாய்த்து விட்டதாம் ! கபாலத்தில் பலத்த அடியாம்! உயிருக்கே ஆபத்தான கட்டமாம்! ரத்தம் வெள்ளக் காடாக வெளியேறி விட்டதாம்! பெரிய டாக்டருக்கு ஆள் போயிருக்கிறதாம் !

'ஐயையோ... மாணிக்கம்!' பக்கத்து வீட்டுக்கு ஓடத் துடித்தாள் கமலம். ஆனால், காமாட்சியின் உருவம் பேயாகத் தடுத்தது.

''கமலம்... உன்னோட சின்ன மகன் மாணிக்கம் சாகப் பிழைக்கக் கிடக்கிறான். உன்னைப் பார்க்கணும்னு, யாபகம் வந்ததும், துடிக்கிறான்'' என்று கண்ணீரும் கம்பலையுமாகக் கதறினாள் காமாட்சி.

''மாணிக்கம்! எம் மகனே மாணிக்கம்!''

விதிக்குக் கமலத்தோடு போட்டி போட்டுக் கொண்டு ஓடத் தெரியவில்லை.

'' சின்னம்மா, வந்திட்டீங்களா?'' என்று ஈனசுவரத்தில் கண்ணீருடன் கேட்டான் மாணிக்கம்.

''வந்திட்டேண்டா, எந் தங்கமே...!'' என்று கதறினாள் கமலம். மாரகச் சேலை நழுவியது. கதறிக் கொண்டே யிருந்தாள். மாணிக்கத்தின் மண்டைக் கட்டை வருடினாள்.

''சின்னம்மா !... என் அண்ணனை நான் குளத்திலே தள்ளிச் சாகடிக்கவே இல்லிங்க, சின்னம்மா ! சத்தியமான பேச்சு இது. நான் பொய் பேசவே மாட்டேன், எங்க ராமையா அண்ணன் மாதிரியே !.... என்னை நம்புங்க சின்னம்மா, நம்புங்க!... நாங்க — நானும் என்னோட அண்ணனும் வச்சுக்கிட்ட பந்தய விளையாட்டிலே அண்ணனுக்குச் சேர வேண்டிய ஜெவிப்புப் பணம் ஒரு ரூபா இந்தாங்க !'' உள்ளங் கையிலிருந்த ஒற்றை ரூபாய்த் தாளை நீட்டினான் சிறுவன் மாணிக்கம். மறுபடியும் நினைவிழப்பு வந்து விட்டது.

கமலம், ''ஐயோ, மாணிக்கம் !... ஐயோ ராமையா!'' என்று கூக்குரலிட்டாள்.

காமாட்சி கிறுக்குப் பிடித்த பாங்கில் கதறினாள். சின்னச்சாமி ஓலம் பரப்பினார்.

மாணிக்கம் மீளவும் இதழ்களைப் பிரித்தான்.

''சின்னம்மா, வாங்கிக்கிங்க. ஏன் பேசாம இருக்கீங்க? நீங்க உசிருக்குசிராய்ப் பாசம் வச்சுக்கிட்டிருந்த ஒங்க மாணிக்கத்துப் பேச்சை நீங்க நம்பலையா?... அப்படின்னு சரி. பந்தயம் கட்டினது எந் தப்புத்தான்! புரியுது!... ம்!... பந்தயத்திலே ஜெவிச்ச பணத்தை நானே எங்க ராமையா அண்ணன் கிட்டே கொடுத்துக்கிடுறேன்!...'' என்று செருமிக் கொண்டே, தலையணையை விட்டுத் தலையைத் தூக்க முனைந்தான் சிறுவன் மாணிக்கம். முடியவில்லை. மாணிக்கத்தின் கண்ணீரைத் துடைத்தாள் கமலம்.

'' அய்யோ ! அப்பிடிச் சொல்லாதேடா, எந்தெய்வமே! பாளத்த விதிக்குத்தான் நம்ம குடும்பத்துக்காக ஒரு காவு கொடுத்துப் புட்டோமே?... ஒனக்கு மார்க்கண்ட வய சாக்கும்!... தெய்வம் இல்லே நான்...! ஆனாலும், தெய்வத்தை நெஞ்சார நம்பிச் சொல்லுற பேச்சு இது. இந்தாப்பா, இந்தக் ஜெவிப்புப் பணத்தை நீயே வைச்சுக்கிடு. எனக்கு நீயும் ராமையாவும் ஒண்ணுதான்! மாணிக்கம், நீ அரிச்சந்திரன். ஒன்னை நம்பாமல், வேறே யாரை இந்தப் பூலோகத்திலே நான் நம்பப் போறேன் ?... காமாச்சி, ஒரு துளி துண்ணூரு எடுத்தாங்க. எங்க மாணிக்கத்துக்குப் பூச வேணும். எம்மகன் மாணிக்கத்துக்குப் பூசவேணும்!... ஒரு பாவமும் அறியாத எங்க மாணிக்கத்தோட உசிரை எந்த விதி வந்து பிடிக்கும்னு பார்த்துப்பிடுறேன் !.....''

உச்சாடனம் கொண்டவளாக, ஓங்காரக் குரல் தூக்கிப் பேசினாள் கமலம். துளி கண்ணீர் வழியவில்லை ! கண்களில் ஓர் அபூர்வ ஒளி மின்னியது. புடவையைச் செம்மைப் படுத்திக் கொண்டு நிமிர்ந்தாள். அவள் கரங்கள் குவிந்தன.

கமலம்தானா அவள்?

அவள் கமலமேதானா?

ஒருகால், அவளேதான் விதியோ? விதியின் விதியோ ?....

''சின்னம்மா!.... ஒங்க கையினாலே காப்பி வாங்கிக் குடிச்சு ரொம்ப நாளாச்சில்லே ?... தாரீங்களா, சின்னம்மா?'' என்று கேட்டான் மாணிக்கம்.




## எல்லாப் பண்டங்களையும் சுதாவில் தயார் செய்து உயர் ரக உணவை அடைய முயலுங்கள்

உங்கள் உணவுக்கு சுதா தனிப்பட்ட மண, ருசியையும் கொடுத்து உங்களுக்கு மேலும் போஷாக்கையும் அளிக்கிறது. சுதா உணவையும் விருந்துபோல் செய்கிறது.

அலுத்துப்போன உணவை உண்டு திருப்தி அடைவதைக் காட்டிலும் பண்டங்களை சுதாவில் தயாரித்து விருந்தைப்போல் சாப்பிடுங்கள்.

உங்கள் சமையலுக்கு சுதா இன்றியமையாத சாதனம்.

# சுதா வனஸ்பதி

கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிடெட்
ஹைட்ரோஜனேஷன் டிவிஷன்
கோழிக்கோடு - 5 கேரளா






★இக்குறியிட்ட கடிதம் ரூபாய் 15/- பரிசு பெறுகிறது.

"சென்ற 28-6-70 கல்கியில் 'நடப்போம் நடப்போம், காந்திவழி நடப்போம்' என்ற கட்டுரையில் உப்பு சத்தியாக்கிரஹத் தொண்டர்களுக்கு உணவு கொடுக்கக் கூடாது என்று கலெக்டர் ஆணை பிறப்பித்தார் என்றும், மக்கள் இதைப் பொருட்படுத்தாமல் ஆற்று மணலில் எல்லாம் உணவுப் பண்டங்களைப் புதைத்து வைத்தார்கள் என்றும் இருக்கிறது. இது நடந்த முழு விவரமும் அல்ல. மன்னார்குடி டாக்டர் முத்துகிருஷ்ணய்யர் செய்த பெரும் ஏற்பாட்டில் ஆலங்குடி (நீடாமங்கலம் சமீபம்) வடகாரவயல் மன்னார்குடியில் 2000 தொண்டர்களுக்கு மாபெரும் விருந்துகள் நடந்தன என்பது எனக்கு நேரில் தெரியும். வேறுசில இடங்களிலும் இதே போல் நடந்ததாகக் கேள்வி.

வடகாரவயல் (ராஜப்பய்யன் சாவடியில்) ஸ்ரீ ராகவய்யர் சம்சாரம் வீராங்கனையாய்க் கிளம்பி, கலெக்டர் உத்தரவைத் திருணமாய் நினைத்துத் தொண்டர்களுக்கு ஸ்நானத்துக்கும் ஏற்பாடு செய்து விருந்து படைத்து அனுப்பினார்கள். அந்த அம்மாளின் தீரம் அக்காலத்தில் ஜான்ஸி ராணிக்கு ஒப்பானது.

சென்னை-4
9-7-70
டி. ராமசந்திரன்

முண்டியம்பாக்கத்துக்கும், விழுப்புரத்துக்கும் உள்ள தூரம் பத்து கிலோ மீட்டர். பஸ் கட்டணம் முப்பது காசுதான். இங்குள்ள சர்க்கரை ஆலையில் வேலை பார்க்கும் தொழிலாளர்களில் பெரும் பகுதியினர் விழுப்புரத்தி லிருந்துதான் வருகிறார்கள். முண்டியம்பாக்கத்துக்கு அப்பால்தான் திண்டிவனம் என்ற ஊர் இருக்கிறது. விழுப்புரத்திலிருந்து திண்டிவனம் போகும் பஸ்கள் முண்டியம்பாக்கத்தைக் கடந்துதான் செல்ல வேண்டும்.

விழுப்புரம் பஸ் ஸ்டாண்டில் காலையில் பத்து மணிக்கு மேலும் மாலை நேரங்களிலும் முண்டியம்பாக்கம் என்று சொன்னால் எந்த பஸ்ஸிலும் டிக்கெட் தரமாட்டேன் என்கிறார்கள். முப்பது பைசா தூரம்தானே என்ற அலட்சியம். இதனால் முப்பது பைசா கொடுத்து வரவேண்டிய இடத்துக்கு ரூ. 1-10 பைசா கொடுத்துத் திண்டிவனம் டிக்கெட் எடுத்து முண்டியம்பாக்கத்தில் இறங்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதற்கு மாற்றம் காண அரசு ஒரு வழி வகுக்குமா?

முண்டியம்பாக்கம்
1-7-70
எல். சிவசுப்பிரமணியன்

★ நான் சுமார் முப்பத்திரண்டு ஆண்டுகளுக்குமேல் அரசாங்க உதவி பெறும் ஆரம்ப நடுத்தரப் பள்ளிகளில் தலைமை ஆசிரியராக இருந்து ஓய்வுபெற்றவன். அண்மையில் சட்டசபையில் மேன்மை தங்கிய அமைச்சரவர்கள், 'கடைத்தரப் பென்ஷனை' அனைவருக்கும் முப்பது ரூபாயாக உயர்த்தியுள்ளோம் என்று அறிவித்தபோது நான் மகிழ்ச்சி அடைந்தேன். ஆனால் நான்கு மாதங்களாகத் தொடர்ந்து எங்களுக்கு இருபது ரூபாயே பென்ஷனாக அளிக்கப்படுகிறது. சப்-டிரஷரியில் இதுபற்றி விசாரித்ததற்கு எய்டட் பள்ளிகளிலிருந்து ஓய்வு பெற்றவர்களுக்கு இருபது ரூபாய்தான் பென்ஷன், முப்பது ரூபாய் கிடையாதென அக்கௌண்டெண்ட் ஜெனரலிடமிருந்து உத்தரவு வந்திருப்பதாகக் கூறுகிறார்கள்.

எய்டெட் (அரசாங்க உதவி பெறும்) பள்ளிகளில் இருப்பவர்களுக்குச் சம்பள விகிதங்களும் சம்பள உயர்வுகளும் மற்ற பஞ்சாயத்து யூனியன், அரசினர் வேலைகளில் பணியாற்றுபவர்களுக்கு இருப்பதைப் போலவேதான் உள்ளன. மேலும் எய்டெட் பள்ளிகளில் எங்கள் சம்பளத்தையும் முழுவதுமாக அரசாங்கமே கொடுக்கிறது. அதில் எந்தவித வித்தியாசமும் இல்லை. பென்ஷன் உயர்வில் மட்டும் ஏன் இந்தப் பாரபட்சம்?

பொன்னமராவதி
3-7-70
சுப்பராய அய்யர்

தற்பொழுது அரசாங்கம் உயர்நிலைப் பள்ளிப் பாடபுத்தகங்களில் தமிழ், ஆங்கிலம், கணக்கு ஆகிய பாட புத்தகங்களை வெளியிட ஏற்றுக் கொண்டிருக்கிறது. இவற்றில் தமிழ் ஒன்றுதான் கடைகளில் கிடைக்கிறது. ஆங்கிலப் புத்தகம் கடைகளுக்கு வருவதில்லை. கணக்குப் புத்தகம் இன்னும் அச்சிடவேயில்லை என்க் கேள்விப்பட்டேன். தனியார் துறையில் பொறுப்பை விட்டிருந்தால் இந்நிலை ஏற்பட்டிருக்குமா ? பள்ளிக்கூடங்கள் திறந்து ஒரு மாதத்துக்கு மேல் ஆகிவிட்டதே.

திருச்சிராப்பள்ளி
9-7-70
ஆர். மகாலிங்கம்

சென்னையில் உள்ள மத்திய நூலகத்தில் அன்றாடம் நடக்கும் நிகழ்ச்சி. படிப்பதற்கென்று வரும் பெரும்பாலோர் (குறிப்பாக, மின்சார விசிறியின் கீழ் அமர்ந்திருப்பவர்கள்) அழகாக உறங்கியவாறு காட்சி அளிக்கின்றனர். இது, நூல்களைப் படிக்கச் செல்லும் பிறருக்கு மனவேதனை தருவதுடன் அவர்களையும் அவ்வாறு உறங்குமாறு தூண்டுகிறது.

வேடிக்கை என்னவென்றால் குளிர்சாதன வசதிகள் கொண்ட அமெரிக்கத் தகவல் நூலகத்திலோ அன்றி, பிரிட்டிஷ் நூலகத்திலோ இதுபோல் உறங்குபவர்களை நாம் காண்பதில்லை! அநியாயமாக இந்தத் தூக்கம் இப்படி ஏன் பாரபட்சம் காட்டுகிறது?

செங்கற்பட்டு
17-7-70
சொ. வேங்கடநாராயணன்

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1947)

"வீணு விகார்" — 17-A, ::பிளாங் ரோடு,

ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்

சயான் (கிழக்கு) பம்பாய்-22, D. D.

டெலிபோன்: 471455

தபால் பெட்டி 6759 :: தந்தி: "GROWRICH"

ஆகஸ்டு 1970-க்குரிய கீழ்க்கண்ட புதிய குருப்புகள் ஆரம்பிக்கப்படுகின்றன

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட குருப்புகள்

| குறுகிய காலம்: 25 மாதங்கள் | | | நீண்ட காலம்: 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி: 8-8-1970 | | | சேருவதற்கு கடைசி தேதி: 29-8-1970 | | |
| முதல் ஏலத் தேதி: 9-8-1970 | | | முதல் ஏலத் தேதி: 30-8-1970 | | |
| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. | வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | G | 125/- | 5,000/- |
| G | 20/- | 500/- | | | |

நீண்ட காலம்: 50 மாதங்கள் - ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

சேருவதற்கு கடைசி தேதி: 15-8-1970 :: முதல் ஏலத் தேதி: 16-8-1970

| வகுப்பு | தவணை ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/- | 1,000/- |

வேலை நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை
மாலை 4 மணி முதல் 7-30 வரை

வார விடுமுறை: திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி : தபால் பெட்டி 414 - சென்னை-5

கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புதுடெல்லி

இலவச பிரகடனத்திற்கு எழுதுங்கள்

சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**



# காலட்சேபம்

சென்னை நகரத்திலுள்ள பிரதான சுவர்களெல்லாம் ஒரேயடியாக 'டெக்னிகலர்' மேனியாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றன.

அரசியல் தலைவர்களின் உருவங்களைப் பெரிது பெரிதாகக் காட்டும் இந்த மாதிரி விளம்பரச் சுவரொட்டிகளால் புதிதாக வெளியிடப்பட்டிருக்கும் அல்லது வெளியிடப்பட விருக்கும் தமிழ், ஆங்கிலத் திரைப்படச் சுவரொட்டி விளம்பரங்கள் சரியாகக் கண்களுக்குப் புலப்படாமல் போகின்றன என்று ஒரு எண்பத்திநாலு பைசா வாடிக்கை ரசிகர் அங்கலாய்த்துக் கொள்கிறார்.

ஆகவே தமிழ்ப்படத் தயாரிப்பாளர்கள் அல்லது விநியோகஸ்தர்கள் இனிமேல் தங்கள் விளம்பரங்களில் ஒரு புதுப் பாணியைக் கையாண்டு பார்க்கலாம். தமிழகத்து ரோமியோ நடிக்கும் ''பிரும்மச்சாரி'' என்ற படம் திரையிடப்பட விருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். உடனே தமிழகத்து ரோமியோவின் உருவப் படத்தைப் பெரிதாகப் போட்டு, ''தமிழக ரோமியோ அவர்களே! தங்களைப் பிரும்மச்சாரியாக பிளாசா, புவனேசுவரி, மகாராணி தியேட்டர்களில் ஆகஸ்டு பதினைலாம் தேதியிலிருந்து வருக வருக வென்று வரவேற்கிறோம்'' என்று வர்ணச் சுவரொட்டிகள் அச்சடித்து நிறைய ஒட்டலாமே!

பிரும்மச்சாரி இருபத்தி ஐந்து வாரங்களோ இருபத்தி ஐந்து நாட்களோ ஓடிவிட்டு ரசிகர்களின் அபிமானம் என்ற அடிப்படையில் அடுத்த படத்துக்கு இடம் கொடுத்துவிட்டுக் கொட்டகையிலிருந்து விடை பெறப் போகிறார் என்று வைத்துக் கொள்வோம். அப்போதும் இந்த மாதிரி சுவரொட்டி விளம்பரங்கள் உபயோகப்படுத்தலாம்:

''தமிழக ரோமியோ அவர்களே! சென்று வருக! அடுத்த படத்தில் மேலும் வெற்றி பெற்றுத் திரும்புக!'' என்ற சுவரொட்டிகளை ஒட்டலாம்.

கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் சமீபத்தில் தம்முடைய ஐம்பத்திஒன்றுவது பிறந்தநாளைக் கொண்டாடும் வகையில் இன்றையச் சம்பிரதாயப்படி கேக் வெட்டினாராம். இது பற்றி அவர் குறிப்பிடுகையில் தம்முடைய நாட்டுப் பண்பின்படி கேக்குக்குப் பதிலாகப் பெரிய இட்டிலியாகத் தயாரித்து வெட்டி விநியோகம் பண்ணலாம் என்று சொன்னதாகப் பத்திரிகையில் பார்த்த நினைவு.

பிறந்த நாள் கேக் என்பது கல்யாண நாள் கேக் முறையிலிருந்து தோன்றியது! அன்றைய ரோமாபுரி சாம்ராஜ்ய நாட்களில் மணப் பெண்ணின் தலைமீது 'கேக்'கை உடைப்பது ஒரு சடங்காக இருந்திருக்கிறது. எப்போதும் மண வாழ்க்கையில் செழிப்பு நிலவ வேண்டும் என்பதற்காக இந்த வழக்கம்!

ஸ்பெயின் நாட்டு ஜிப்ஸிகள் சாதாரண கேக் செய்ய மாட்டார்கள். டன் கணக்கில் மாவைப் பிசைந்து மலை போல் கேக் செய்து வந்திருக்கும் விருந்தினர்களையெல்லாம் அந்தக் கேக்கையே ஒரு மேடையாகப் பாவித்து அதன் மேல் நடனம் ஆடச் சொல்வார்கள். நடனம் முடியும்போது அவர்கள் எல்லோரும் முழங்கால்வரை அந்தக் கேக்கிற்குள் இறங்கியிருப்பார்களாம்!

அமைச்சர் நெடுஞ்செழியன் யோசனைப்படி இந்த மாதிரி இட்லி தயார் செய்ய முடியுமா என்று கற்பனை செய்து பார்க்கிறேன்! பாழும் கற்பனை, கூடவே எத்தனை அண்டா சாம்பார் தேவைப்படும் என்றுதாவுகிறதே!

பிரயாணிகளுக்கு இடைஞ்சல் பண்ணும் டாக்ஸி டிரைவர்கள் மீது போலீஸார் பம்பாயில் கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்கிறார்களாம். சென்னையில் எனக்கு ஏற்பட்ட ஓர் அனுபவம் இச்சமயம் நினைவுக்கு வருகிறது.

நான் போக வேண்டிய பக்கமாக ஒரு காலி டாக்ஸி வந்தது. கையைக் காட்டினேன். நின்றது. 'எங்கே போக வேண்டும்' என்று வினவினார் டாக்ஸி ஓட்டி.

''பார்த்தசாரதிப் பெருமாள் கோவில் வாசலில் கொண்டுபோய்



விட்டால் போதும்'' என்று சொல்லிக் கொண்டே டாக்ஸியின் பின் கதவைத் திறக்கப் போனேன்.

''வண்டி வராது'' என்றார் டாக்ஸி ஓட்டி.

''ஏனப்பா! மணி ஆறரைதான் ஆகிறது. அதற்குள்ளேயே வண்டி வராதுங்கறே! ஷெட்டுக்குப் போவதாக ஓர் அறிவிப்பையும் காணோம்'' என்றேன் சற்றுப் பின்னால் வந்து.

''இதெல்லாம் என்ன கேள்வி? வண்டி வராது'' என்று டாக்ஸியை நகர்த்த முற்பட்டார் அந்த ஓட்டி.

''சரி! டாக்ஸி நம்பரையும் உன் பேரையும் கொஞ்சம் சொல்றியா?'' என்றேன் சற்று அழுத்தமாக. சும்மா அவருக்கு நான் கொஞ்சம் விஷயம் தெரிந்தவன் என்று காண்பித்துக் கொள்ளத்தான்!

இரண்டையும் அவர் சொன்னார். பிறகு டாக்ஸியை ஓட்டிக் கொண்டு முன்னால் சென்றார். அவர் சொன்ன விஷயத்தை நான் இந்தக் காதில் வாங்கி அந்தக் காது வழியாக விட்டு விட்டு, பஸ்ஸாவது வேறு டாக்ஸியாவது வராதா என்று காத்திருந்தேன்.

இரண்டு நிமிடங்கள்கூட ஆகியிருக்காது. அந்த டாக்ஸி ஓட்டி காரைத் திருப்பிக் கொண்டு வந்து எதிர்ப்பக்கம்—மைலாப்பூர் பக்கம் பார்ப்பது போல் என் முன் நிறுத்தித் தலையை வெளியே நீட்டி ஏகவசனத்தில், ''என்னவோ, நம்பர், பேரு எல்லாம் விசாரிச்சியே! என் தலையை வாங்கிடுவியோ?'' என்று ஆரம்பித்தார். அந்த நேரத்தில் எனக்கு வம்புச் சண்டைக்குப் போகும் உற்சாகம் இல்லை. நான் சும்மா நின்றேன். ''கம்ளெயின்ட் பண்ணிப் பாரு! அப்புறம் உன் வீட்டுக்குள்ளே புகுந்து உதைப்பேன், ஜாக்கிரதை!'' என்று அன்பு பொங்க உறுமிவிட்டுப் போனார்.

எனக்குச் சிரிப்பு வந்தது. சும்மா போயிருக்க வேண்டியவர் ஏன் திரும்பி வந்தார்? தம் மனத்தில் ஏற்பட்ட பயத்தை மறைக்க இப்படி ஓர் அசட்டு முறைப்பு!

சில நிமிடங்கள் கழித்து வேறு ஒரு டாக்ஸி அந்தப் பக்கம் வந்தது. கையைக் காட்டி நிறுத்தினேன். அந்த டாக்ஸி ஓட்டியிடம், 'நீங்க எந்தப் பக்கம் போறீங்க?'' என்றேன். ''ஏன்? நீங்க எங்கே போகணுமோ, அங்கே கொண்டு விடறேன்'' என்றார் அவர். டாக்ஸியில் ஏறி அமர்ந்து, போகுமிடத்தைச் சொல்லி விட்டு, அதோடு சில நிமிடங்களுக்கு முன் நடந்த விஷயத்தைச் சொன்னேன்.

அவர் நிதானமாகச் சொன்னார்: ''தயவு செய்து நடந்ததை மறந்துடுங்க. அவனுக்காக நான் மன்னிப்புக் கேட்கிறேன். எங்க தொழில் மதிப்பு இந்த மாதிரி ஒண்ணு ரெண்டு பேராலேதான் கெட்டுப் போகுது'' என்றார். அவர் தொழில் பக்தியை எண்ணி நான் பரவசமடைந்தேன்.

இப்போதெல்லாம் கோயில்தேவஸ்தான நிருவாகஸ்தர்கள் கோயில் வரும்படியை அதிகரித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையில் 'பாதரட்சைக் காவல்' தொழிலைக்கூடக் குத்தகைக்கு விட்டு விடுகிறார்கள். ஒரு நிமிடம் இரண்டு நிமிடம் செருப்புக்களைக் கோயில் வாயிலில் விட்டுப் போகக்கூட ஐந்து பைசா காவல் கூலி வசூலிக்கும் குண்டர்களுக்குக் கப்பம் கட்டவேண்டியிருக்கிறது. தினசரி ஐந்து பைசாவோ பத்துப் பைசாவோ எல்லோராலும் கொடுக்க முடியாத நிலையில் சிலர் தங்கள் மிதியடிகளை, கோயிலுக்கு வெளியே ஒரு பக்கமாக விட்டு உள்ளே போகிறார்கள். திரும்பி வரும் போது அந்த மிதியடிகள் காணாமற் போய்விடுகின்றன. அதாவது தனக்கு ஐந்து பைசா கொடுக்க விரும்பாதவர்கள் செருப்பு அணிய லாயக்கானவர்களே இல்லை என்று அந்தக் குத்தகை குண்டர் முடிவு செய்து, வெளியே அவர் உரிமைப் பிரதேசத்துக்கு அப்பால் இருக்கும் செருப்புக்களை அபேஸ் செய்து பழி வாங்கி விடுகிறார்! நான் சும்மா சொல்லவில்லை. மூன்று ஜோடி செருப்புக்களை இழந்த அநுபவத்தில் சொல்லுகிறேன். இதைப் பற்றித் திட்டவட்டமாக தேவஸ்தான நிர்வாகிகளிடம் சொன்னாலும் அவர்கள் காதில் போட்டுக் கொள்வதில்லை. கோவிலுக்குள்ளே போய் நின்றால் நினைவெல்லாம் செருப்பு திருடுபோகாமல்இருப்பதில் லயிக்கும் போது இறைவனிடம் மனம் எப்படி ஈடுபடும்?

- வம்புசாமி



# சத்திய சோதனை




தமிழாக்கம்: ராஜாஜி

## 39

கஷ்ட நிவாரணம் செய்கிறேம் என்று சொல்லி மதம் மாற்றும் முயற்சிகள் நடத்துவது நல்லதல்ல. கடவுளை வழிபடும் முறை அவனவனுடைய உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளைப் பொறுத்தவை. என்னுடைய வியாதியைத் தீர்த்த வைத்தியன் கிறிஸ்தவனாக இருக்கிறான். அவனுக்கு உகந்த மதம் அது. அவன் என் வியாதியைத் தீர்த்துவிட்டபடியினால் அவனுடைய மருந்தோடு அவனுடைய மதத்தையும் நான் எடுத்துக் கொள்ள வேண்டுமா? அவனிடம் நான் மருந்து வாங்கிச் சாப்பிடும் காலத்தில் அவனுக்கும் எனக்கும் ஒரு சம்பந்தம் ஏற்படுகிறது. அந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொண்டு என்னுடைய மதத்தை மாற்ற முயல்வது நியாயமாகுமா? என் வியாதியைத் தீர்த்துவிட்டால் அதனால் அந்த வைத்தியனுக்குத் திருப்தியும் பெருமகிழ்ச்சியும் உண்டாகும். அதற்கு மேல் அவனுக்கு என்ன கைம்மாறு வேண்டும்? என்னுடைய மதத்தையும் மாற்ற வேண்டும் என்பது என்ன அவசியம்? கிறிஸ்தவப் பள்ளிக்கூடத்தில் என்னைச் சேர்த்துக் கொண்டு பாடம் சொல்லித் தந்தால் எனக்கு இஷ்டமில்லாத மத போதனையையும் ஏன் திணிக்க வேண்டும்? இது எல்லாம் நியாயமும் அல்ல. நன்மையும் தராது. சந்தேகமும் வெறுப்பும்தான் உண்டாகும். சமயக் கொள்கைகளைப் பிரசாரம் செய்ய வேண்டுமானால் சந்தேகாஸ்பதம் இல்லாத முறையில் செய்ய வேண்டும். அபவாதத்துக்கு இடம் கொடுக்கக் கூடாது. சமயக் கொள்கைகளை வியாகரணம் கணிதம் இவற்றைப் போல் பாடம் சொல்லிப் புகுத்தல் இயலாது. பக்தியும் வழிபாடும் வெறும் பாடங்கள் அல்ல. உள்ளத்திலிருந்து தோன்ற வேண்டும். ஆசிரியன் உள்ளத்தில் பக்தியிருந்தால் அது தானாக அவனைச் சுற்றி வாசனை வீசும். பக்தியானது புஷ்பங்களைப் போல் தானாகவே தன்னுடைய சுவாசனையைத் தரும்.

மத மாற்றுதலை நான் வேண்டாம் என்று சொல்லவில்லை. அதற்காகத் தற்காலத்தில் எடுக்கும் முயற்சிகளைத் தான் கண்டிக்கிறேன். மதங்களுக்கு ஆள் சேர்ப்பது ஒரு வியாபாரம் ஆகிவிட்டது. வரவு செலவுக் கணக்குகள் கூட வைக்கிறார்கள். ஒரு மிஷனரி ரிப்போர்ட்டில் படித்ததாக எனக்கு நினைவுக்கு வருகிறது. மதம் மாறும் ஆள் ஒன்றுக்கு எவ்வளவு ? செலவு என்று கணக்குப் போட்டு, அடுத்த வருஷ மகசூல் அறுப்புக்கு எவ்வளவு வேண்டும் என்று செலவுத் திட்டம் போட்டிருந்தது.

இந்திய மக்கள் அனுசரித்து வரும் வழிபாட்டு முறைகள் அவர்களுக்குப் போதும், மாற்ற வேண்டிய அவசியமில்லை என்பது என்னுடைய உறுதியான கொள்கை. கிறிஸ்து மதம், யூதர்கள் மதம், ஹிந்துக்களுடைய பல சமயங்கள், இஸ்லாம், பார்ஸி மதம், எல்லா மதங்களுமே உயிர்கொண்டு வளர்ந்து வரும் மதங்கள். எந்தச் சமயமுமே பரிபூரணத்தை அடையவில்லை. பரஸ்பரம் நட்பும் பரிச்சயமும் வேண்டுமே ஒழிய 'என்னுடைய முறை சரி', உன்னுடைய முறை தவறு' என்று வீண் பூசல்களில் இறங்கிச் சண்டை பிடிக்க வேண்டியதில்லை. பரஸ்பரம் நட்புரிமை கொண்டு, ஒருவர் சமயத்தை மற்றவர் நன்றாக அறிந்துகொண்டு வாழ்க்கை நடத்தினோமானால் எல்லாருமே குறைகளைத் தீர்த்துக் கொண்டும் சீர்திருத்தங்கள் செய்து கொண்டும் முன்னேற்றம் அடையலாம்.

தவறான முறைகளில் செய்யப்படும் மதமாற்றம் நமக்குத் தேவை இல்லை. உள்ளத்தைச் சுத்தப்படுத்திக் கொள்வது அவசியம். பாப எண்ணங்களை நீக்கிக் கொண்டு ஆத்ம தரிசனம் பெற வேண்டும். அது அல்லவோ மதமாற்றம். பிறருடைய மதத்தை மாற்ற முயல்வதற்குமுன் நமக்குள் கிடக்கும் குற்றங்களை நீக்கிக் கொள்ள வேண்டும். 'மருந்து கொடுக்கிறேன்' என்று சொல்லும் வைத்தியருக்கே ஆரோக்கியம் இல்லை. ''உன் நோயை முதலில் தீர்த்துக் கொள்'' என்று சொல்ல வேண்டியதாக இருக்கிறது. இது ஒரு பைபிள் வாசகம்! (ல்யூக் 4-22)

[யங் இந்தியா 23-4-31]

## நிக்ஸன் கேட்க வேண்டிய

# கம்போடியக் கதை

கம்போடியாவில் ஆறு ஒன்றில் ஒரு செம்படவப் பெண் மீன் பிடித்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவளது தூண்டிலில் சிக்கியது ஓர் ஆமை. சாதாரண ஆமையல்ல. வண்ணங்கள் மின்னும் பொன் ஓடு தரித்த அற்புத ஆமை. ஆமையைக் கண்டு மயங்கிய செம்படவப் பெண் அதைப் பிடிக்க மனம் வராது மீண்டும் ஓடும் ஆற்றில் விட்டுவிட்டாள். இரண்டாம் தடவையும் அதைப் பிடித்து ஆற்றிலே விட்டாள். மூன்றும் முறையாக அந்த ஆமை அவளது தூண்டிலில் அகப்பட, அதைத் திரும்பவும் ஆற்றில்விட யத்தனித்த போது அந்த ஆமை ''அம்மா! என்னை மறுபடியும் ஆற்றில் விடாதீர்கள். என்னை உங்கள் வீட்டுக்குத் தூக்கிச் செல்லுங்கள். என்னால் ஏதாவது உங்களுக்கு உபயோகம் ஏற்படும்'' என்று கெஞ்சிக் கேட்டது. செம்படவப் பெண்ணுக்குக் குழந்தைகள் கிடையாது. எனவே, அவளும் அவள் கணவரும் அந்த அற்புத ஆமையை அன்புடன் தங்கள் சொந்தக் குழந்தையைப் போல் எண்ணிப் பேணி வந்தனர். அதுவும் அவ்வப் போது அவர்களுக்கு நல்ல நல்ல யோசனைகளைக் கூறி உதவி வந்தது

ஒருநாள் ஆமை ''அப்பா! இன்னும் சில தினங்களில் இங்கு பெரிய வெள்ளம் வரப் போகிறது. ஏராளமான நஷ்டம் ஏற்படும். எனவே அதனின்றும் உங்களைப் பாதுகாத்துக் கொள்ள ஒரு தோணியைத் தயார் செய்து வைத்துக் கொள்ளுங்கள்'' என்று அறிவுறுத்தியது. செம்படவனும் ஆமையின் யோசனைக்கேற்ப ஒரு பெரிய வலுவுள்ள தோணியைத் தயார் செய்தான். கொஞ்ச நாட்களில் நாட்டில் பலத்த மழை பெய்யத் தொடங்கியது. தண்ணீர் கரை புரண்டு ஓட எங்கும் பயங்கர வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. செம்படவத் தம்பதியரும், ஆமையும் தோணியில் அமர்ந்து உயிர் தப்பினர். அப்பொழுது ஆமை, ''அப்பா! உங்கள் தோணி வெள்ளத்தில் தறிகெட்டு ஓடாமல் இருக்க நான் தண்ணீருக்கடியில் சென்று தோணியின் கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறேன். ஏதாவது வேண்டுமானால் கயிற்றை ஆட்டினால் வெளியில் வந்து கேட்கிறேன்'' என்று கூறிவிட்டுத் தண்ணீருக்கடியில் சென்று மறைந்தது.

தோணி போய்க் கொண்டிருக்கும்போது எதிரில் தட்டுத் தடுமாறியவாறு நீந்தி வந்த புலியொன்று ''ஐயா! என்னை எப்படியாவது காப்பாற்றுங்கள், புண்ணியமுண்டு'' என்று செம்படவனைப் பார்த்துக் கெஞ்சியது. அதற்கு உதவலாமா வெனக் கேட்கக் கயிற்றைச் செம்படவன் அசைத்தான். ஆமையும் வெளியில் வந்து ''உதவலாம்'' என்று யோசனை கூறியது. புலியும் தோணியில் ஏறியது.

மேலும் சிறிது தூரம் சென்றபோது ஒரு கொடிய நாகம் நீரில் சிரமப்பட்டு வந்து, ''ஐயா! என்னால் நீந்த முடியவில்லை. என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று இறைஞ்சவே, ஆமையிடம் முன்போல் கேட்டு அநுமதி பெற்று அதையும் தோணியில் ஏற்றிக் கொண்டான்.

பின்னர் தோணி செல்லும் வழியில் எதிரில் களைத்தவாறு நீந்திவரும் மனிதனைக் கண்டார்கள் செம்படவத் தம்பதியர். ''ஐயா, என்னைக் கைவிடாதீர்கள். என்னை மூழ்காமல் காப்பாற்றுங்கள்'' என்று பரிதாபமாகக் கெஞ்சினான் அம் மனிதன். ஆமையை வெளியில் வரவழைத்து யோசனை கேட்டபோது, ''உங்கள் இனம் தான் அவன். இருப்பினும் அவனுக்கு உதவுவது உசிதமாகப் படவில்லை'' என்று யோசனை கூறியது ஆமை. மனிதனை விடாமல் புலம்பினான். செம்படவனுக்கு மனம் இளகியது. ஆமையின் யோசனையையும் புறக்கணித்து மனிதனையும் தோணியில் ஏற்றிக் கொண்டான்.

நாட்கள் சென்றபோது வெள்ளம் வடிந்தது. மீண்டும் இயல்பான வாழ்க்கை ஆரம்பமாயிற்று. புலி, நாகம், மனிதன் ஆகியோர் தத்தம் வழியே சென்றனர். ஒரு நாள் அந்த நாட்டு ராஜாவின் பெண் பரிவாரத்துடன் காட்டில் தங்கியிருந்தபோது, புலி, ராணியின் விலைமதிப்பில்லா நகைகள் அடங்கிய பெட்டியைக் கவர்ந்து, செம்படவனிடம் வந்து அப்பெட்டியை அன்பளிப்பாகத் தந்து விட்டுச் சென்றது. செம்படவனும் சந்தோஷமாக அதை ஒரு மூலையில் வைத்திருந்தான். ராஜ்யம் முழுக்கப் பெட்டிக்காகத் தேடிக் கொண்டிருந்த சமயம் செம்படவனால் காப்பாற்றப்பட்ட மனிதன் செம்படவன் வீட்டுக்கு வந்தான். அங்கு மூலையில் வைக்கப்பட்டிருந்த நகைப் பெட்டியைக் கண்டான். அவனால் சும்மா இருக்க முடியவில்லை. நேராக அரசனிடம் சென்று நகைப் பெட்டி இருக்குமிடத்தைத் தெரிவித்தான். செம்படவத் தம்பதி சிறைச்சாலையில் அடைக்கப்பட்டனர். அப்பொழுது நாகம் இதைக் கேள்வியுற்றது. ஆபத்துசமயத்தில் தன்னைக் காப்பாற்றிய அன்புத் தம்பதியருக்கு உதவ எண்ணியது. அரண்மனை அந்தப்புரத்தில் ஆனந்தமாகத் துயில் கொண்டிருந்த அரசகுமாரியின் கண்களை அது கடித்தது. விஷம் பரவி அரச



குமாரிக்குப் பார்வை போயிற்று. நேராகச் சிறையிலுள்ள செம்படவத் தம்பதியிடம் வந்த நாகம் தான் செய்ததைக் கூறிவிட்டு, விஷத்தை முறிக்கக்கூடிய மூலிகையையும் கொடுத்துவிட்டுச் சென்றது.

அரசன் அரச குமாரியைக் குணப்படுத்துவோருக்குப் பாதி ராஜ்யம் கொடுப்பதாகக் கூறியும் ஒருவரும் முன்வரவில்லை. அப்போது செம்படவத் தம்பதி தம்மால் அரச குமாரியைக் குணப்படுத்த முடியும் எனத் தெரிவித்தனர். அரசன் அவர்களைக் கூப்பிட்டனுப்பினான். செம்படவன் நாகம் கொடுத்த மூலிகையை உபயோகித்து அரச குமாரிக்கு இழந்த பார்வையை மீட்டுக் கொடுத்தான். செம்படவத் தம்பதிக்குப் பாதி ராஜ்யம் கிடைத்தது. ஆமை சிறிது காலம் அவர்களுடன் இருந்துவிட்டுப் பின்புவிடைபெற்றது.

உயிரினங்களில் நன்றி கெட்டவன் மனிதன்தான் என்பதைப் போதிக்கும் இது ஒரு கம்போடிய நாடோடிக் கதை.

— என். ராஜாமணி

---

## தொங்கும் ரயில் வண்டி



வளைவான 'கர்டர்'களின் மேலே அமைக்கப்பட்டுள்ள ஒற்றைத் தண்டவாளத்தில் தொங்கிக் கொண்டே செல்லும் இரயில் வண்டி மேற்கு ஜெர்மனியில் உப்பர்டால் நகரில் இருக்கிறது.

-யூ.பி.எஸ்.

---



"ஏன் சார், ஹெட்மாஸ்டர் வெளியே நிற்கிறாரு?"

"பசங்களுக்கெல்லாம் இடம் கொடுத்தாரா? இப்போ இவருக்கே இடம் இல்லாமே போச்சு!" -ம. செ

---



தரமான உணவு விடுதிகளில் சாப்பிடுவதானால் இந்திய உணவு, நியூடெல்லியை விட நியூயார்க்கில் மலிவு.

— ஆர். கே. நாராயணன்

(இல்லஸ்டிரேட்டட் வீக்லி) தகவல்: முத்து

---

"என்னங்க, சரோஜாவைப் பார்த்துவிட்டு வரலாம்னு இருக்கேன். அவள் மாமியார் கூடப் படுத்த படுக்கையாகக் கிடந்தாங்க! இப்ப எப்படி இருக்கோ?"

"தாராளமாகப் போய் வாயேன்!... வழியிலே தானே கீதாவும் இருக்கா!"

"அட, நீங்களே சொல்லிட்டீங்களே! அவ்வளவு தூரம் போயிட்டு அவளைப் பார்க்காமல் வரலாமா?"

"ஜெயா அத்தையைக்கூடப் பார்த்துட்டு வரவேண்டாமா? அவங்க பெண்ணுக்குக்கூட குழந்தை பிறந்திருக்கே!"

"சொல்லிக் கொடுத்தாப்பலே சொல்றீங்களே!"

"உன் தம்பி வீட்டுக்கும் போய் ஒரு ரவுண்டு அடிச்சுட்டு...."

"என்னங்க உங்களுக்கு ஜோசியம் கீசியம் ஏதாவது தெரியுமா?"

"வரும்போது வீட்டிலிருக்கிற உன் சிநேகிதிங்க உமா, பானுமதி இவங்களையும் பார்த்துட்டு ராத்திரி ஒன்பதுக்குள்ளே வீட்டுக்கு வந்துடுவே! சரிதானே!"

"நான் என்னமோ எங்கெங்கே போகப் போறேன்னு லிஸ்ட் கொடுத்து வைக்க நீங்க படிச்ச மாதிரியில்லே சொல்லிட்டீங்க!........ ஆபீஸ் வேலையைக் கவனிக்கிறப்போ இவ்வளவையும் சொல்லிட்டீங்களே! எப்படிங்க கண்டுபிடிச்சீங்க?"

"இதுக்குப் போய்ப் பிரமாதமா ஜோசியம் தெரியணுமா என்ன? நேத்து நீ ஜவுளிக் கடையிலே வாங்கியிருக்கிற புது மாதிரிப் பட்டுப் புடவைக்கு நான்தானே கையாக இரண்டு நூறு ரூபாய்களை எண்ணிக் கொடுத்திட்டு வந்திருக்கேன்!"

— ரமணி ரங்கநாதன்

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# பாரீர்! வளமூட்டப்பட்ட புதிய அஸ்ட்ரா
# நீங்கள் கோரியவற்றை எல்லாம் கொண்டுவருகிறது --ஏன், அதற்கும் மேலாக!




**இதோ நீங்கள் கோரியவை:**
கூடுதலான மால்ட் சுவை வளம்
--அடடா, அதன் இனிப்பே இனிப்பு!

**இதோ, அதற்கும் மேலாக:**
வற்றாத சக்தியை வழங்குவதற்கென
லைசின், தயமின் சத்துக்கள் சேர்க்கப்பட்டுள்ளது!

எந்நேரமும் வற்றாத தெம்புடன் இன்பம் சுவைத்திட இன்றே பருகுவீர் வளமூட்டப்பட்ட புதிய அஸ்ட்ரா!
இன்று அஸ்ட்ராவிலே இருப்பதென்ன? மற்றெந்த ஆரோக்கிய பானத்திலும் இல்லாத 2 சிறப்புச் சத்துக்கள்: புரத வலிமைக்கான லைசின்; தெம்பு தூண்டுவதற்கான தயமின். எனவே நீங்கள் பெறுவது மேல்மட்டமான சக்தி அல்ல, வேரூன்றிய வலிமை, ஊற்றெடுக்கும் ஆற்றல், உள்ளூரமான சக்தி!
இனிமை செறிந்தது அஸ்ட்ரா--இனிக்க இனிக்கப் பருகுவீர் ஏற்றமிகு, புதிய மால்ட் நயம். ஏற்கனவே பால் அடங்கியுள்ளதால், நீரில் கலந்தாலே போதும், ஆரோக்கியம் ததும்பும் பானம் ஆயத்தம்!
எளிதில் ஜீரணிக்கத் தக்கது ஆதலால் உடம்பில் சேர்த்துக்கொள்ளப்படும். புதிய அஸ்ட்ரா--மும்முரமான உணவியல் ஆராய்ச்சியின் பயனாக, உங்களுக்கென்றே இந்துஸ்தான் லீவர் படைத்திடும் பானம்.



இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-AST. 8-140 TH